# 1974 ல் கடாவ் நவநாகரிகப் பாணிகளுக்கு வழிகாட்டும்

## கடாவ்
வாயில்கள்



KMS-32/PREM ASSOCIATES/TAM

# பச்சிள மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர் –

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம்: பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு— ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

**பிறந்த நாளைய மிக்க மென்மையோடு**
**உங்கள் மேனி மிளிரப் பேருதவி**

*Johnson & Johnson**






லிண்டாஸ்-J&J. 4-140 TM




வெள்ளைத் துணி-உடைகளை மிகப்பளிச்சிடும்
தூய வெண்மை ஆக்குவதற்கு

# ராபின் ப்ளூ தான் தேவை

(என்பதை லட்சக்கணக்கான குடும்பப்
பெண்கள் ஒப்புக்கொள்ளுகின்றனர்)




வெள்ளைத் துணி-உடைகளை, சோப்பு அல்லது டிடர்ஜென்ட் கொண்டு வெளுக்கச் செய்வது மட்டும் போதாது. மிகப் பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குவதற்கு அவற்றை ராபின் ப்ளூவில் மூழ்கச் செய்தெடுக்க வேண்டும். ஒரு வாளி தண்ணீரில் ஒரு சிட்டிகை ராபின் ப்ளூ அற்புதமாக வேலை செய்யும்.

# ராபின் ப்ளூ

ARBC-38 TAM

# கல்கி பொருளடக்கம்

ஆனந்த, சித்திரை 8 — ஏப்ரல் 21, 1974



மேலட்டை: காவியம் காணும் கனவோ ?
கனவில் விரிவதும் காவியமோ ?

வண்ணப்படம் : திலீப் பானர்ஜி



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே


| கல்கி சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா --பாரதியார்



மலர் 33 : : இதழ் 38

# நட்புறவுக்கு நல்வரவு!

கு. சந்தானம்

இருபத்தேழு ஆண்டுகளுக்கு முன் பாகிஸ்தான் பிரிவினை தோற்றுவித்த மனக்கசப்பு, விரோதம், மனஸ்தாபம் எல்லாம் இப்போது மறைந்து விட்டன. பிரிவினையின் மிகக் கொடுமையான அம்சம், இந்தியாவிலிருந்து முஸ்லிம் பிராந்தியங்களான வடமேற்கு, வடகிழக்குப் பிரதேசங்கள் பிரிக்கப்பட்டதன்று. வடகிழக்குப் பகுதி — வட மேற்குப் பகுதி ஆகிய இரண்டையும் கட்டாயத் திருமணமாக ஒரே நாடாக இணைத்ததுதான். இது இயற்கைக்கு ஒவ்வாத கொடுமையாக விளங்கியது. சமாதான முறையில் இரண்டு பகுதிகளுக்குமிடையே விவாகரத்து ஏற்பட வகை இல்லாமல் போனதால்தான் கிழக்கு பாகிஸ்தானில் கலகம், எதிர்ப்பு, இந்தியாவின் தலையீடு, போர், சரணாகதி என்ற நடவடிக்கைகள் அவசியமாயின.

சில நாட்களுக்கு முன் தில்லியில் கையெழுத்தான முத்தரப்பு உடன்படிக்கையினால் இதுவரையில் முன்னேற்றம் காணாத சமாதான முயற்சிகள் வெற்றி பெறுவதற்கு வகை செய்யப்பட்டுள்ளது.

பேச்சு வார்த்தைகள் முறிந்துபோய் விடுமோ என்ற அச்சம் கடைசிவரையில் இருந்தது. பங்களா தேசப் பிரதமர் ஷேக் முஜிபுர் ரஹ்மானின் பெருந்தன்மைதான் பேச்சு வார்த்தைகள் முறியாமல் வெற்றி பெறச் செய்தது. விசாரணைக்கு வைத்திருந்த 195 பாகிஸ்தானியக் கைதிகள்மீது நடவடிக்கையைக் கைவிட அவர் ஒப்புக்கொண்டது அவரது தாராள சிந்தையைக் காட்டுகிறது.

வங்க தேசப் பிரதமர் காட்டிய அளவு பெருந்தன்மையைப் பாகிஸ்தான் காட்டாதது விசனிக்கத்தக்கதே. வங்க தேசத்திலுள்ள பீஹாரி முஸ்லிம்களை பாகிஸ்தானுக்கு வந்து குடியேற அனுமதிப்பதில் தாராள மனப்பான்மை காட்டப்படவில்லை. உத்தரப் பிரதேசத்திலிருந்தும் பீஹாரிலிருந்தும் பாகிஸ்தான் ஒரே நாடு என்ற எண்ணத்தில், கிழக்குப் பாகிஸ்தானில் குடியேறியவர்கள், கலாசாரத்திலும் மனப்பான்மையிலும் மொழியிலும் மேற்குப் பாகிஸ்தானுடன்தான் இணைந்தவர்கள். தங்களை எப்போதும் பாகிஸ்தானியர் என்றே அவர்கள் கருதி வந்திருக்கின்றனர். போரின்போது பாகிஸ்தான் ராணுவத்துக்குச் சாதகமாகப் பல வகையில் உதவி, வங்க மக்களின் பழி வாங்கும் நடவடிக்கைகளுக்கும் ஆளானார்கள். அவர்கள் அனைவரையும் பாகிஸ்தான் ஏற்றுக் கொள்ளுவதுதான் நியாயமாகும். இப்போது கையெழுத்தான உடன்படிக்கையின்படி இவர்களில் ஒரு பகுதியினரே பாகிஸ்தானில் குடியேற அனுமதிக்கப்பட்டுள்ளனர். மற்றவர்கள் விஷயமாக பாகிஸ்தான் நல்லெண்ணத்துடன் நடந்து கொள்ளும் என்று எதிர்பார்ப்பதற்கு அதிகமாக உறுதிமொழி ஏதும் இல்லை. எப்படியும் இப்பிரச்னைகள் இனி பங்களா தேசம்—பாகிஸ்தான் இரு நாடுகளும் பேசித் தீர்த்துக்கொள்ள வேண்டியவை. மேலும் முத்தரப்புப் பேச்சு வார்த்தைகளுக்கு அவசியம் இல்லை.

இனி பாகிஸ்தானும் இந்தியாவும், பங்களா தேசமும் இந்தியாவும் தனித் தனியே தங்களிடையில் நல்லுறவு வளர்ந்து வலுப்படுமாறு பேச்சு வார்த்தைகளை நடத்திக் கொள்ளலாம். அதோடு, இந்தியாவின் ஆதிக்கம் பங்களா தேசத்தின் மீது ஓங்கிவிட்டது என்று பாகிஸ்தானோ மற்ற உலக நாடுகளோ தவறான எண்ணம் கொள்ளாத படிக்கு இந்தியா எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும்.

இந்தியா — பாகிஸ்தான் நல்லுறவு சீர்ப்படுவதற்கு இன்னும் சற்றுக் காலதாமதம் ஆகும். காஷ்மீர்ப் பிரச்னை அடியோடு மறைந்தால்தான் பாகிஸ்தானின் விரோதம் மறையும். அந்த நிலைமை ஏற்படும் வரையில் பாகிஸ்தான் விஷயத்தில் இந்தியா அசாதாரணப் பொறுமையும் சகிப்புத் தன்மையும் காட்டத்தான் வேண்டும். நட்புக்கு இடைவிடாத முயற்சிகளை மேற்கொள்ளவும் வேண்டும்.


பாகிஸ்தான்
இந்தியா
பங்களாதேஷ்
சகோதரர் அன்றோ?


யார் அங்கே?
க.ஃபூர் மந்திரிசபை


நாட்டின் பொருளாதாரம்
ரயில்வே
ஸ்டிரைக்


டிக்
டிக்
தனியார் வர்த்தகம்.
அரசாங்க உணவு தானிய மொத்த வியாபாரம்

# அமைதியின் உருவம் அமைதி இழந்தது!

சாந்தமும் அமைதியுமே உருவான திரு ஜெயப்பிரகாஷ் நாராயண் அவர்களே பொறுமை இழந்துவிடுமளவுக்கு நமது நாட்டில் பொருளாதார—தார்மீகச் சீர்கேடுகள் மலிந்துவிட்டன. எனவேதான் அரசியல் கட்சிகளிலிருந்து விலகி சர்வோதய இயக்கத்தில் ஈடுபட்டு நாட்டுக்குச் சேவை புரியும் திரு. ஜெயப்பிரகாஷ் நாராயண், மீண்டும் அரசியலில் நுழைந்து தொண்டர் படை திரட்டி, தம்முடைய தலைமையிலேயே மௌன ஊர்வலம் நடத்தத் துணிந்தார். தமது மாநிலமான பீஹாரில் அரசை ஸ்தம்பிக்கச் செய்யும் இந்நடவடிக்கையை அவர் மேற்கொண்டுள்ளார். ஆனால் மாநிலம் யாவுக்கும் இது படிப்படியாகப் பரவி ஜனநாயகத்தைக் காக்கும் இயக்கமாகப் பரிணமிக்கும் என்றும் அவர் திட்டமிடுகிறார்.

விலைவாசி உயர்வு, லஞ்ச ஊழல்கள், வேலை வாய்ப்பின்மை — இம் மூன்று குறைகளை முக்கியமாக வலியுறுத்தவே அவர் இப்போதைய நடவடிக்கையை மேற்கொண்டுள்ளார். இவை பீஹார் மாநிலத்துக்கு மட்டும் உள்ள குறைபாடுகளல்ல, நாடு முழுதும் காணப்படுபவை.

ஊர்வலங்களாலும் எதிர்ப்புக் கோஷங்களாலும் இந்தக் குறைபாடுகள் நீங்கிவிடப் போவதில்லை. எனினும் நமது அரசாங்கம் எதிர்ப்பைத் தீவிரமாக்கி ஊர்வலம், ஹர்த்தால் என்று நடத்தினாலொழிய நடவடிக்கை ஏதும் எடுப்பதுமில்லை. தீர்க்க தரிசனத்துடன் செயல்படாமல் முரண்டு செய்து பின்னர் எதிர்ப்பு சமாளிக்க முடியாத அளவுக்குப் போனதும் பணிந்து கொடுப்பதே அரசுக்கு வழக்கமாகி வருகிறது.

பூனாவில் பேசிய பிரதமர்கூட விலைவாசிகள் உயர்ந்து வருவதை நாங்களும் உணர்ந்துதான் இருக்கிறோம். ஆனால் என்ன செய்வது, நிலைமையை எப்படிச் சமாளிப்பது என்றுதான் புரியவில்லை என்று கையைப் பிசையும் பாணியில் பேசியுள்ளார்.

இன்று அரசாங்கத்துக்கு உடனடியாகத் தேவைப்படுவது பொருளாதாரத் துறையில் செய்துள்ள தவறுகளைத் திருத்திக் கொள்ள மனோதைரியமும் புதிய முன்னேற்றகரமான யோசனைகளைக் கூறக்கூடிய நிபுணர் குழுவும்.

சித்தாந்தமும் கொள்கையும் முக்கியமல்ல; நாட்டின் பொருளாதார முன்னேற்றமே முக்கியம் என்பதை அரசு உணராத வரையில் ஜெயப்பிரகாசருக்கு மன அமைதி கிடைக்காது. வேலை இருக்கும்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

### வாழ்த்துகிறோம்!

இந்திய என்ஜினீரிங் சங்கத்தின் தென் பிராந்தியப் பிரிவுக்கு 1974–75 ஆண்டுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள திரு ஹரி சகவரன் இளம் தலைமுறைத் தொழில் வித்தகர். ஈசன் அண்டு ஸன்ஸ் நிறுவனத்தின் ஜெனரல் மானேஜர். உற்பத்திப் பொருள்களை மட்டுமின்றி இந்தியப் பொறி இயல் திறமையையும் அயல் நாடுகளுக்கு அனுப்பி அந்நியச் செலாவணி சம்பாதித்துத் தரும் ஆற்றலுள்ளவர். பிரபல தொழிலதிபர் திரு கே. சகவரனின் புதல்வர் என்ற வகையில் அவரது அனுபவ ஞானத்தைப் படித்துணர்ந்ததுடன் ஒரு பெரிய நிறுவனத்தின் இயக்கத்தினை ஒவ்வொரு நிலையிலும் கண்டு அறிந்தவர். இவையெல்லாம் தமது பொறுப்பை ஆற்ற அவருக்கு உறுதுணையாக நிற்கும் எனவும் அவர் பணி சிறக்கும் எனவும் நம்பலாம்.



ஹரி சகவரன்

### கூட்டுறவுக் கலப்படம்!

ஏப்ரல் முதல் வாரம் கூட்டுறவுத் துறையிலுள்ள ஊழல்கள் பற்றித் தமிழகச் சட்டசபையில் எதிர்க்கட்சி உறுப்பினர்கள் நிறையவே எடுத்து விளக்கியிருக்கிறார்கள். அதே தினத்தில் வெளியான இன்னும் ஒரு செய்தியைப் பார்த்தால் சட்டசபை எதிர்க்கட்சி உறுப்பினர்கள் எதையும் மிகைப்படுத்திப் பேசிவிடவில்லை என்று கருதத் தோன்றுகிறது.

தஞ்சை மாவட்டத்தில் திருக்காட்டுப் பள்ளிக்கு அருகே உள்ள ஓர் ஊரின் கூட்டுறவுச் சங்க விற்பனை நிலையத்தில் சர்க்கரையில் கோலப் பொடியைக் கலந்து விற்பனை செய்ததைக் கிராம மக்களே கண்டுபிடித்துக் குமுறி எழுந்திருக்கிறார்கள். அதே கூட்டுறவுக் கடையில் மற்றொரு சமயம் சுண்ணாம்புத் தூளைக் கலந்து சர்க்கரை விற்ற காரணத்தினால் அந்தச் சர்க்கரையை வாங்கி உபயோகித்தவர்களில் பலருக்கு வாய் வெந்து போனதாகவும் தெரிகிறது.

கூட்டுறவு விற்பனை நிலையமாயிற்றே என்றுதானோ என்னவோ சர்க்கரையுடன் இதர பொருள்களைக் கூட்டுறவு செய்து மக்களைச் சோதனைக்கு உள்ளாக்கியிருக்கிறார்கள். மக்கள் வயிறெரியும்படி நடக்

தும் இப்படிப்பட்ட கொடுமைகளுக்கு எப்போதுதான் விடிவு பிறக்குமோ?

## கூவம் விழுங்கிய பணம்

தமிழ் நாடு அரசு கூவம் திட்டம் பற்றிய இந்திய ஆடிட்டர் ஜெனரலின் அறிக்கை சட்டசபையின் இந்தக் கூட்டத் தொடரில் தரப்பட்டிருக்கிறது. காண்ட்ராக்ட் விடுவதில் செய்யப்பட்ட தவறுகளால் நஷ்டம், உயர் அதிகாரிகளின் யோசனைகள் புறக்கணிக்கப்பட்டதால் நஷ்டம், வேலைகள் குறித்த காலத்தில் முடியாததால் நஷ்டம், திட்டமிட்ட விதமாகச் செயல்படாமல் இஷ்டம் போல் நடைமுறையை மாற்றிக்கொண்டதால் நஷ்டம் என்று பலவித நஷ்டங்களைப் பட்டியல் போட்டுத் தருகிறது அறிக்கை. அத்தனை நஷ்டமும் மக்களுக்குத்தான்.

கூவம் விழுங்கிய மக்களின் வரிப் பணம் யானை வாயில் போன கரும்புதான்.

## திட்ட நிபுணர்கள்

தமிழ் நாட்டு அரசின் திட்டக் குழு உறுப்பினர்களில் சிலர் தி. மு. க. ஆட்சியின் கொள்கைகளை விமர்சிக்கவும், குறை கூறவும் விவாதிக்கவும் கூடத் துணிகிறார்கள் என்பதற்காகத் தற்சமயம் அந்தக் குழுவையே கலைத்துவிட்டால் என்ன என்று கூட அரசு நினைப்பதாகத் தெரிய வருகிறது.

அரசின் நன்மை தீமைகளைக் கவனித்து நல்லவற்றை ஊக்கப்படுத்தி விடவும், தவறானவற்றை வெளியே கூறி விமர்சித்துக் கண்டிக்கவும்தானே ஓர் ஆலோசனைக் குழு பயன்பட முடியும்? அந்த ஆலோசனைக் குழுவை நியமித்தவர்களே அதற்கு வாய்ப் பூட்டுப் போட விரும்பினால் அப்புறம் அதனால் என்ன பயன் விளைய முடியும்?

## உளறலில் இது ஒரு விதமா ?

சென்ற வாரம் கோவில்களிலுள்ள சிலைகளை எல்லாம் எடுத்து உருக்கி விற்க வேண்டும் என்று பேசிய கம்யூனிஸ்ட் உறுப்பினர் இந்த வாரம் ''ஏழை மக்கள் குடியிருக்க இடமின்றித் திண்டாடும்போது கோவில்களில் சாமிக்கு மண்டபம், பள்ளியறை, கர்ப்பக்கிருகம் என்பது போல் பல அறைகள் தேவைதானா?'' என்று கேட்டிருக்கிறார். ஏழைகளுக்கு இரங்குவது போல் நடிக்கும் இவர், நாளை ''டில்லியில் ஜனாதிபதிக்கு இவ்வளவு பெரிய மாளிகை ஏன்? பிரதமர் ஏன் குடிசையில் இருக்கக் கூடாது? முதல்வருக்கு ஏன் ஏர்கண்டிஷன்டு கார்? சட்டசபை உறுப்பினருக்கு ஏன் வசதியான விடுதி?'' என்றெல்லாம் கூடக் கேட்கலாம். அறிவாற்றலுடன் பேசிச் சிலர் பிரபல்யமடைகிறார்கள். வேறு சிலர் அர்த்தமற்றுப் பேசியே பிரபலமடைந்து விடுகிறார்கள்!

## வயதுக் கோளாறு

சமீபத்தில் தமிழ் நாட்டிலிருந்து தி. மு. க. சார்பில் ராஜ்ய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் திரு வலம்புரி ஜானுக்கு 27 வயதுதான் ஆகிறதாம். சட்டப்படி ராஜ்ய சபைக்கு ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட 30 வயது ஆகியிருக்க வேண்டுமாம்.

சென்னையில் வேட்பாளர் மனுக்களைப் பரிசீலனை செய்தபோது, வேட்பாளரின் கட்சியினருக்கும் அதிகாரிகளுக்கும் மிக முக்கியமான இந்த வயது விஷயம் எப்படிக் கண்ணில் படாமல் போயிற்றென்பது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ஒருவேளை தமிழக முதல்வருக்கு வேண்டிய வேட்பாளர் என்பதே எல்லாரையும் மற்றெல்லாவற்றையும் மறக்கச் செய்து விட்டதோ?

## நாத்திகர்கள் அல்ல

சட்டசபையில் அறநிலையத் துறைப் பாதுகாப்பு மானியக் கோரிக்கை மீது விவாதம் நடைபெறுகையில் எப்படிப்பட்டவர்களை அறங்காவலர்களாக நியமிப்பது என்ற பிரச்னையினை ஒட்டிப் பேசும்போது, ''ஆண்டவன் நம்மை நம்புகிற அளவுக்கு நடந்துகொள்ள வேண்டும் என்பதுதான் எங்கள் கட்சியின் கொள்கை. எங்கள் கட்சியின் கொள்கை நாத்திகம் அல்ல. 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்று (திருமூலர்) சொன்னதைத் தான் எங்கள் கட்சித் தலைமையும் கூறியது'' என்ற தொனியில் முதல்வர் எடுத்துரைத்திருக்கிறார். தொடர்ந்து தி.மு.க. உறுப்பினர் ஒருவர் பேசும்போதுகூட ''அறங்காவலர்களாகக் கோவில்களுக்கு நியமிக்கப்படுகிறவர்கள் பக்தர்களாகவே இருக்க வேண்டும்'' என்று வற்புறுத்தியிருக்கிறார். ஆளும் கட்சியின் இந்த வரவேற்கத் தக்க எண்ணங்கள் பாராட்டுக்குரியவை. எண்ணங்களோடு நில்லாது, செயலுருவம் பெறட்டும்.

## ராஜாஜி சிந்தனை

ஒரு குளத்தில் ஒரு கல் போட்டால் அது ஜலத்தைக் கலக்கி அலைகள் உண்டாக்கும். எவ்வளவு சிறிய கல்லும் அதன் கனத்துக்கும் வேகத்துக்கும் தகுந்த அளவில் அலைகளைக் கிளப்பும். சிறு கலக்கமானாலும் அதன் வேகம் அலை அலையாகச் சென்று கரையை மோதும். ஓர் அலை மற்றோர் அலையை வெட்டும். ஒன்றோடு ஒன்று சேர்ந்து பெருகுவதும் குறுகுவதும் உண்டு. ஆனால் எந்தச் சிறிய சலனமும் வீண் போகாது. இதே விதம் நம்முடைய செயல்களும். செயலென்றால் மனத்தில் உதிக்கும் எண்ணங்களும் அதில் அடங்கும். வெகு இரகசியமான மனத் தோற்றமுங் கூடப் பரம்பொருள் என்ற ஆகாச சமுத்திரத்தில் அலைகளை உண்டாக்கிச் செல்லும். அது தன் பலனை உண்டாக்கியே தீரும். ஆகவே நமது ஒவ்வொரு செயலும் எண்ணமும் தூய்மையுடன் இருப்பது அவசியம்.

# எஃகு நகரம்
# ஒரு பூஞ்சோலை நகரமாகவும் ஆக முடியுமா?

இந்தியாவின் எஃகு நகரமான ஜாம்ஷெட்பூர் ஒரு முன்மாதிரி நகரமாகத் திகழவேண்டும் என்றே திட்டமிடப்பட்டிருந்தது.

''நிழல் தரும் மரங்களைக் கொண்ட, அகன்ற தெருக்களாக அமைத்திட மறந்திட வேண்டாம். ஒன்று விட்டு ஒன்று, துரிதமாக வளர்ந்திடும் வகை மரங்களை நடவும். புல்வெளிகளுக்கும் பூங்காக்களுக்கும் போதிய வசதி செய்திடவும்.''—என்று ஜாம்ஷெட்ஜி டாடா தனது மகன் தோராப்புக்கு எழுதியிருந்தார்.

இன்று ஜாம்ஷெட்பூர் அவ்வண்ணமே உள்ளது—எஃகு நகரத்தோடு ஒரு பூஞ்சோலை நகரமாகவும் பரிமளிக்கிறது.

குடியிருப்பு வீடுகள் கூட, எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் ஜாம்ஷெட்ஜி வெளியிட்ட விருப்பங்களை நினைவில் நிறுத்தி, திட்டமிட்டு அமைக்கப் பட்டிருப்பதோடல்லாமல், இன்னும் விரிவுபடுத்தப்பட்டுக்கொண்டே இருக்கின்றன.

மரங்களின் அடர்த்தியில்
தொழிற்சாலை கண்ணுக்குப்
புலப்படுவதே இல்லை!






**டாடா ஸ்டீல்**

A:YAPS-TS 5 TM

# அம்பாளை உபாசிப்பதன் பலன்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

②

சரஸ்வதி கடாக்ஷம், லக்ஷ்மி கடாக்ஷம் இரண்டும் அம்பாள் அநுக்ரகத்தால் கிடைக்கும் என்றேன். இந்த இரண்டையும் பற்றி மநுஷ்ய ஸ்வபாவம் ரொம்பவும் விசித்திரமாக இருக்கிறது. எல்லாரும் தங்களுக்கு ரொம்பவும் சரஸ்வதி கடாக்ஷம், அதாவது புத்திசாலித்தனம் இருப்பதாகவே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் — தங்களை மகாபுத்திசாலிகளாகவே வெளியிலே காட்டிக்கொள்ளப் பிரியப்படுகிறார்கள். ஆனால் நல்ல புத்தி வேண்டும் என்று அதற்காகத் தாபத்தோடு யாரும் பிரார்த்திப்பதாகத் தெரியவில்லை. பொதுவாகப் புத்திசாலித்தனம் என்பது சாமர்த்தியம் என்றுதான் நினைக்கப்படுகிறது. ஞானமும் விவேகமும்தான் உண்மையான புத்திமானின் லட்சணங்கள். இவற்றுக்கு யாரும் ஆசைப்படுவதில்லை. 'நமக்கு நிறைய சாமர்த்தியமும், சாதுர்யமும் இருக்கின்றன; அதாவது யாரையும் ஏமாற்றி விடலாம்' என்று அவரவரும் சந்தோஷப்பட்டுக் கொண்டு 'இந்தப் புத்திசாலித்தன'த்தோடு நின்றுவிடுகிறோம். ஆனால் லக்ஷ்மீ கடாட்சம் மட்டும் எவ்வளவு இருந்தாலும் நமக்குப் போத மாட்டேன் என்கிறது. மண்டுவாக இருந்தாலுங்கூடத் தன்னைப் புத்திசாலியாகக் காட்டிக் கொள்வதற்கு நேர்மாறாக, நமக்கு எத்தனை சம்பத்து இருந்தாலும் அது வெளியில் தெரியக் கூடாது என்று ஏழை வேஷம் தான் போடுகிறோம். ஒருத்தனைப் பற்றி யாராவது 'எத்தனை புத்திசாலி?' என்று பேசினால் சந்தோஷப்படுகிறான். ஆனால் ஒருத்தன் பாங்கில் லட்சம் லட்சமாகப் பணம் போட்டிருக்கிறான் என்று யாராவது சொன்னால் அவனுக்குக் கோபம்தான் வருகிறது. தங்களுக்கு இருக்கிற செல்வம் போதாது என்பதால்தான் இவர்களுக்கு அதைப் பற்றிச் சொன்னாலே கோபம் வருகிறது. அதிருப்திதான் தரித்திரம். திருப்திதான் சம்பத்து. நம்மில் பலர் வாஸ்தவமாகவே தரித்திரர்களாக இருந்தாலும் கூட, அப்படிச் சொல்லிக் கொள்ளாமல், மனசால் நிறைந்து, திருப்தியால் பணக்காரர்களாக இருந்து கொண்டிருக்கலாம்.

புத்தி, செல்வம் இவற்றோடு ஒவ்வொருத்தருக்கும் அழகாக இருக்க வேண்டும் என்கிற ஆசை இருக்கிறது. தான் புத்திசாலி என்பதைப் போல, எல்லோரையும் விடத் தானே அழகு என்கிற எண்ணம் நம் ஒவ்வொருத்தருக்கும் இருக்கிறது. இதற்குத்தான் அலங்காரம் எல்லாம் பிரமாதமாகச் செய்துகொள்கிறோம். பல ஃபாஷன்கள் மாறிக்கொண்டேயிருப்பதெல்லாம் நம் அழகைப் பிரகடனம் பண்ணிக் கொள்ளத்தான். பரம கருணாமூர்த்தியான அம்பாள், கேவலம் ரத்த-மாம்ச சம்பந்தமான இந்தச் சரீர அழகை விரும்புகிறவர்களுக்கு அதைக் கூடப் பூரணமாகக் கொடுத்து அநுக்கிரகிக்கிறாள். ''ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா'' என்கிற ஸௌந்தர்ய லஹரி ச்லோகத்தில் ஆசாரியாள் இதையும் சொல்கிறார். 'அம்பாளை உபாசிக்கிறவனுக்கு பிரம்மாவே அசூயைப்படுகிற அளவுக்கு சரஸ்வதி அநுக்கிரகம் உண்டாகிவிடும்; மகாவிஷ்ணு பொறாமைப் படுகிற அளவுக்கு மகாலக்ஷ்மி அநுக்கிரகம் கிடைத்துவிடும்; இவனைப் பார்த்து 'மன்மதனேதானோ?' என்று ரதியே சந்தேகப்படுகிற மாதிரி லாவண்யம் உண்டாகி விடும்' என்கிறார்.

இத்தனையும் இருந்து தீர்க்காயுசு இல்லை என்றால் என்ன பிரயோசனம்? அம்பாள் சிரஞ்சீவித்துவமும் தருவாள் என்கிறார்.

'இதற்கு மேல் என்ன வேண்டும்?' என்று தோன்றலாம். ஆனால் இதற்குமேல்தான் அம்பாளின் பரமாநுக்கிரகத்தைத் தேடச் செய்யும் கேள்வியே பிறக்கும். 'இத்தனை பணம், அழகு, புத்தி எல்லாவற்றையும் வைத்துக் கொண்டு இத்தனை காலம் ஓட்டியாச்சு! இதிலெல்லாம் வாஸ்தவத்தில் என்ன மன நிறைவைக் கண்டோம்? இதையெல்லாம் வைத்துக் கொண்டு எப்போது பார்த்தாலும் சஞ்சலப் பட்டுக் கொண்டே, ஒன்றை விட்டால் இன்னொன்று என்று தாவிக் கொண்டே இருந்திருக்கிறோம். நிரந்தர சௌக்கியத்தை, சாந்தத்தை இது எதனாலும் பெற்றதாகத் தெரியவில்லையே! இதை எப்படிப் போக்கிக் கொள்வது?' என்கிற கேள்வி பிறக்கும். நடுநடுவே நமக்கு இந்தக்கேள்வி தோன்றினாலும், அடுத்த க்ஷணமே மாயை நம்மை இழுத்துக் கொண்டு போகிறது. ஆனால் நாமாக இப்படி நினைக்காமல் அம்பாளை உபாசித்ததன் பலனாக, அவள் இப்படி நம்மை நினைக்கப் பண்ணுகிறபோது, அந்த நினைப்பு மேலும் மேலும் தீவிரமாக ஆகும். 'பணம் வேணும், அழகு வேணும், ஆயுள் வேணும்' என்பதெல்லாம் மேலும் மேலும் நம்மைப் பாசத்தில் கட்டிப் பிரமையில்தான் தள்ளிக் கொண்டிருந்தது என்கிற அறிவு உண்டாகும். பாசம் என்றால் கயிறு. பாசத்தில் கட்டுப்படுவது பசு. கயிற்றைப் போட்டுத் தறியில் கட்டின பசு மாதிரி, ஒரு குறிப்பிட்ட தூரத்துக்கு மேல் போக முடியாமல், அதற்குள் கிடைக்கிற இன்பங்களையே சாப்பிட்டுக் கொண்டு, அசட்டுத்தனமாக 'அதுவே எல்லாம்' என்று திருப்திப்பட்டுக் கொண்டிருக்கிறோம். இந்தக் கட்டை அறுத்துக் கொள்ள வேண்டும். அப்புறம் பரம சுதந்திரம். இந்த இந்திரியங்களின் சின்ன சௌக்கியங்களுக்கு அப்புறம் அகண்டமான, சாச்வதமான ஆத்ம ஆனந்தம்! பாசம் போய், நாம் பசுவாகக் கட்டுப்பட்டுக் கிடந்த நிலையும் போய்விட்டால் அப்புறம் நாம் பரப்பிரம்மம்தான். பணம், புத்தி, ஆயுள், அழகு, இவை எல்லாவற்றுக்கும் தனித்த மனசில் இவற்றின் கட்டுக்களை வேண்டாம் என்கிற வைராக்கியம் உண்டானால் அப்புறம் பேரின்ப மயமாக ஆகலாம். அதைவிடப் பெரிய பலன் வேறில்லை. முடிந்த முடிவாக அம்பாள் பக்தனை இந்தப் பரமானந்த ரசத்தில் திளைத்துக்கொண்டிருக்குமாறு அருள்கிறாள் என்று ஆசார்யாள் முடிக்கிறார்.

# அவசரங்கள்

ரு. வேங்கடரமணி



அலுவலகக் கட்டடத்தில் மாடிப் படிகளைக் கடந்து, தன்னுடைய இடத்துக்குப் போய் உட்கார்ந்து கொண்டு, நெற்றியிலும் கழுத்திலும் துளித்திருந்த வியர்வையை அவசரமாக அழுத்தித் துடைத்துவிட்டுக் கொண்டான் ரங்கதுரை.

மணி ஒன்பது இருபது.

அவன் சீக்கிரமாகவே வந்து விட்டான். ஒரு வாரமாய் ஹோட்டல் சாப்பாடு. அதனால் சீக்கிரமாகவே வந்து விடுகிறான். இன்று மிகவும் முன்னதாகவே வந்துவிட்டான். அவனுடைய பிரிவின் கடைநிலைச் சிப்பந்தி தாமஸ்கூட வரவில்லை.

மின் விசிறியை ஓடவிட்டு, அதன் அடியில் போய் நின்று கொண்டு காற்றை இரண்டு மூன்று முறைகள் உள்ளிழுத்தும் வெளியேற்றியும் தீர்க்கமாகச் சுவாசித்தான். சட்டையைப் பின்னுக்குத் தள்ளிவிட்டுக் கொண்டு நெஞ்சில் காற்றலைகள் மோதுமாறு வழி செய்து கொண்டான். அப்போது அவன் விழிகள் தாழ்ந்து கீழ் நோக்க நேரிட்டன. அவன் பார்வையில் சட்டைப் பைக்குள் நான்காக மடித்து வைத்திருந்த கடிதம் கிடைத்தது. அவனுடைய சொந்த ஊரிலிருந்து சபாபதி எழுதிய கடிதம் அது. ஒரு வாரம் முன்பே வந்துவிட்டது அக்கடிதம்.

ரங்கதுரை தன்னுடைய நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். முன்பே நாலைந்து முறைகள் படித்துப் பார்த்துவிட்ட அந்தக் கடிதத்தின் ஏழெட்டு வரிகளை மீண்டும் ஒரு தடவை படிக்க ஆரம்பித்தான். அப்பொழுது தான் அவனுடைய மூளையில் ஒரு நினைப்பு சுரீரென்று குத்திக் கொண்டு ஆழமாகச் சென்றது. இன்று தேதி பதினெட்டு. இன்று தான் சபாபதி சென்னைக்கு வருவதாகவும், அவனைச் சந்திப்பதாகவும் எழுதியிருக்கிறார்.

'உன்னிடம் நேரில் பேச விரும்புகிறேன். அதற்காகவே அங்கு வருகிறேன்' என்று முடிந்திருந்தது கடிதம். அவனிடம் எதைப் பற்றிப் பேசப் போகிறார் என்பதை எழுதவில்லை அவர். ஆனால் அவன் மனத்தில், அவருடைய வருகைக்கான காரணம் பளிச்சென்று தோன்றிவிட்டது. பணம்! அவன் கொடுக்க வேண்டிய பணத்தைக் கேட்கத்தான் கடைசியில் அவர் நேராகவே வரப் போகிறார்.

ரங்கதுரை மேஜை மேல் எடுத்துப் போட்டுக் கொண்ட காகிதக் கட்டை அவிழ்த்தான். 'அவசரம்; மிக அவசரம்; தாமதத்துக்கு விளக்கத்தோடு உடன் பதில் தருக—'

சே ! எல்லாம் அவசரந்தான் !

ரங்கதுரை தன் வாழ்க்கையில் — உத்தியோகத்தில் — அவசரப்படவில்லை. அவசரப்பட வழியில்லை. பத்து வருடங்களில் ஒரே ஒரு படி ஏறி உதவியாளராக மாறியிருக்கிறான்; அவ்வளவுதான்; அது மாத்திரமில்லை, அந்தச் சபாபதியிடமிருந்து வாங்கிய பணத்தைத் திருப்பிக் கொடுக்கக்கூட அவன் அவசரப்படவில்லை; அவசரப்பட முடியவில்லை. அவனுக்கு முன்னே காகிதங்களில் காணப்படும் 'அவசரங்கள்' முன்னும் பின்னுமாகத் தள்ளப்பட்டு அலலமாகப் போவதைப் போலவே அவனுள்ளும் அந்தக் கடன் இத்தனை காலமாக அலைக்கழிக்கப் பட்டுக் கொண்டிருக்கிறது. சபாபதியிடம் வாங்கிய பணத்தைத் திருப்பிக் கொடுத்துக் கடனைத் தீர்த்துவிடத் தீர்மானித்து எப்படியாவது பணம் தேடி முடிக்கும்போது வேறே ஒரு சோதனை வரும். சபாபதியின் அவசரம் அதிலே மீண்டு வருவது சாத்தியமில்லாமல் போய்விடும்.

ரங்கதுரை நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டான்.

ஒரு வாரம் முன்புதான் சபாபதியின் இந்தக் கடிதம் வந்தது. அது வந்த மறுநாள் தான் சிவகாமி ஊருக்குப் போனாள். ''போயும், போயும் அவர் உங்ககிட்டே போய்ப் பணத்தைக் கொடுத்தாரே ?'' என்று சிவகாமி கேட்டது அப்படியே ஞாபகம் இருக்கிறது.

''என்ன சொன்னே?'' என்று மெதுவாக, வெகு நேரம் அதிர்ந்து போய் ஓய்ந்துவிட்ட பிறகு, கேட்டான் ரங்கதுரை.

'' நீங்க அதைத் திருப்பிக் கொடுக்கப் போகிறதே இல்லே. முதல்லே என்னோட கடனைக் கொடுத்துத் தீர்க்கவே உங்களுக்கு வழியில்லே.''

''உன்னோட கடனா?''

''ஆமாம். என்னோட நகையை வைச்சுக் கடன் வாங்கியிருக்கீங்களே, அது யார்கிட்ட வாங்கின கடன்?''

ரங்கதுரையின் மனம் அதிர்ந்தது. ஆனால் இரண்டு மூன்று நிமிடங்களில் அவன் ஓய்ந்து போய்விட்டான். அவனுக்குள் அழுகைதான் வெடித்தது.

''சிவகாமி! முதல்லே நான் சபாபதி கிட்டே கடன் கொடுக்கச் சொல்லிக் கேட்கல்லே. அவராகத்தான் கொடுத்தார். அவர் கொடுக்காமலே இருந்திருந்தால் நான் பட்டணத்துக்கு வந்திருக்க மாட்டேன். இந்த வேலையும் எனக்குக் கிடைச்சிருக்காது. அதோட உனக்கும் எனக்கும் கல்யாணம் கூட நடந்திருக்காது.''

''அப்புறம்?''

''அப்புறம் ஒண்ணுமில்லே.''

ரங்கதுரை ஒதுங்கிப் போய் உட்கார்ந்து கொண்டான். மேஜையின்மேல் கிடந்த பழைய பத்திரிகைகளைப் புரட்டும் போது, சபாபதியின் கடனைத் தீர்க்க ஏதாவது வழி உண்டா என்று அவன் தீவிரமாகச் சிந்தித்தான். சேமிப்பு நிதியிலிருந்து இன்னும் ஒரு வருஷத்துக்கு முன் பணம் வாங்க முடியாது. அவனுடைய நண்பர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவானது. அதிலே ஆயிரம், ஐந்நூறு என்று தூக்கிக் கொடுக்கக்கூடியவர்கள் இல்லவே இல்லை. சிவகாமியின் சங்கிலி! சே! அதுதான் ஆறு மாதங்களுக்கு முன்பே அடமானமாகப் போய் விட்டதே!

சிவகாமி அதை ஆதாரமாக வைத்துக் கொண்டுதானே இத்தனையும் பேசுகிறாள்? ரங்கதுரையின் மௌனத்துக்குள் ஆத்திரம் புழுங்கிற்று. தன்னைத் தானே ஆற்றாமையோடு தாக்கிக் கொண்டான்.

'இத்தனை செலவும் யாருக்காகப் பண்ணினேன்? நான் காப்பி குடிக்க நூறு தடவை யோசனை பண்ணி மிச்சம் பிடிக்கிறேன். நீ எதையாவது குறைத்துக் கொண்டாயா? உனக்குச் சங்கிலி வேண்டும். ஆனால் எனக்கு எதுவுமே வேண்டாம். நீகூடத் தான்.'

ஆனால், சபாபதியோட பணத்தை எப்படியாவது முதலில் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். மொத்தமாகக் கொடுக்காவிட்டாலும், மாதா மாதம் கொஞ்சம் கொஞ்சமாய்..... அவர்கூடப் பத்து வருஷங்களுக்கு முன்னால் அப்படித்தான் சொன்னார். ஆனால் அவனால் முடியவில்லை. இனி மேல் அப்படிச் செய்வது நன்றாக இருக்காது. மொத்தமாகக் கொடுத்துவிட வேண்டும்.

சபாபதி இந்தப் பத்து வருஷங்களில் ஏழெட்டுக் கடிதங்கள்தான் எழுதியிருப்பார். போன மாதம் மகனுக்கு உடம்பு சரியில்லை என்றும் வைத்தியச் செலவு ஏகப்பட்டதாக இருப்பதால் பணம் அனுப்பினால் சௌகரியமாக இருக்கும் என்று கேட்டிருந்தார்.

'முயற்சி செய்கிறேன்' என்று ஒரு வரி எழுதிப் போட்டான் ரங்கதுரை. அவருக்கு ஒரே பிள்ளை; தாயில்லாப் பிள்ளை. அவனை வைத்துக் கொண்டு, கிராமத்தில் தம்முடைய பழைய வீட்டில் தாமே சமையல் செய்து நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கிறார். அந்த ஒரே பிள்ளைதான் அவருக்குத் துணை. ஆதாரம். ரங்கதுரைக்கு அவருடைய அவசரம் புரிந்தது; அவசரத்தின் அவசியமும் புரிந்தது. ஒரு நடை ஊருக்கு ஓடிப் போய் அவரிடம் தன்னுடைய இயலாமையைச் சொல்லி அழுதுவிட்டு வரலாம் என்று தோன்றியது. ஆனால் அதனால் அவருக்கு என்ன பிரயோசனம்?

மணி பத்தைக் கடந்து விட்டது.

ஒவ்வொருவராக வரத் தொடங்கினார்கள். தாமஸ் ஆஜர் பட்டியலுடன் வந்தான்.



கடனைத் திருப்பித் தர அவசரமில்லை; ஆனாலும் ரங்கதுரை அவசரப் பட்டான்!

# ஆசியப் பழமொழிகள்

சீனா:

அதிகம் குரைக்கிற நாயை நல்ல நாய் என்று சொல்ல முடியாது; அதே மாதிரி அதிகம் பேசுகிற வனையும் நல்ல மனிதன் என்று கருத முடியாது.



இந்தியா:

மூடனுக்கு அறிவுரை வழங்குவதும், அணிலுக்கு உப்பைக் கொடுப்பதும் ஒன்றுதான்.



கொரியா:

நீங்கள் இரு எலிகளைப் பிடிக்க எண்ணித் துரத்தினால் ஓர் எலியைக்கூடப் பிடிக்க முடியாது.



லாவோஸ்:

தண்ணீர் வற்றும்போது எறும்புகள் மீனைத் தின்னும்; தண்ணீர் பெருகும்போது மீன், எறும்பைத் தின்னும்.



பர்மா:

ஒரு மலையின் மீது சிறிது சிறிதாகத்தான் ஏற முடியும்; செல்வத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் திரட்ட முடியும்; ஞானத்தையும் சிறிது சிறிதாகத்தான் பெற்றுக் கொள்ள முடியும்.



மலேயா:

மரத்துக்கு உறுதியான பல வேர்கள் இருக்குமானால் புயலைப் பற்றிக் கவலைப்பட வேண்டியது இல்லை.

-உதகை நா. மனோகரன்



''சார்! நீங்கதான் இன்னிக்கு முதல்லே வந்திங்க போலே இருக்கு.''

'' உம்.... ஆமாப்பா !''

'' ஏன் சார் ! உங்ககிட்டே வேலே ரொம்பத் தங்கிப் போச்சா ? இருக்காதே ! நீங்க முடிச்சுடுவீங்களே. ஏதாவது அவசர ஃபைல் மேலே போகணுமா ?''

''இல்லே, தாமஸ்!'' ரங்கதுரைக்குத் தன் நினைப்புக்களை வெளியே கொட்டிவிட வேண்டும் என்ற நிர்ப்பந்தம். ஆனால் சிரமப்பட்டுத் தன்னை அடக்கிக் கொள்ள முயன்றான்.

'' சொல்லுங்க, சார் ! உடம்பு சரியில் லையா ? ஒரு மாதிரியா இருக்கீங்களே ?''

'' உடம்பெல்லாம் சரியாகத்தான் இருக்கு.''

'' அப்போ மனசிலே கவலே ஏதோ இருக்கணும். உங்க முகம் சரியாகவே இல்லேயே !''

நான் எப்படி இருக்கிறேன்? எனக்குள்ளே—என் மனசிலே என்ன இருக்கிறது? கவலேயா, வருத்தமா, ஆத்திரமா ? அவனுக்குள்ளே எல்லாம் சேர்ந்து ஒரே குழப்பமாக மாறிக் கொண்டிருந்தது. இத்தனே நாட்களும் சிவகாமியிடம் காட்டிய பொறுமை யெல்லாம் ஒரு பலமான உணர்ச்சியாகத் திரண்டு வந்தது. 'சிவகாமி! நீ இனிமேல் இரும்பியே வர வேண்டாம்! அப்படியே, அங்கேயே — உன் பிறந்த வீட்டிலேயே இருந்துவிடு' என்று அவசரமாகத் தனக்குள் சொல்லிக் கொண்டான்.

பத்து வருஷங்களுக்கு மேல் இந்த வேலே பார்த்தும் சபாபதியிடம் வாங்கின கடனேத் திருப்பிக் தர வழியில்லே. அவனே நம்பி யிருக்கிறார்; அவன் வேலே தேடப் போகி றான், சம்பாதித்து ஒரு நாள் திருப்பிக் கொடுத்துவிடுவான் என்று அவர் நினேத் திருக்கிறார். அவன் பார்க்கிற இந்த வேலேயை நம்பி ஒருத்தன் அவனுக்குப் பெண்ணே வேறு கொடுத்துவிட்டான்.

நான் கல்யாணமே பண்ணிக் கொண் டிருக்கக் கூடாது. அதுவும் சிவகாமியைப் போல் ஒரு பெண்ணே.... அவளுக்கு ஏன் நிலேமை புரியமாட்டேன் என்கிறது? என் மேல் அனுதாபம் காட்டக்கூட அவளுக்கு மனம் வரவில்லேயே ! போன மாதம் புடவை வாங்கினுள்; அறுபத்தேழு ரூபாய். எதிர் வீட்டில், பக்கத்து வீட்டில் சினிமாவுக்குப் போகிறார்கள். இவளால் பார்த்துக் கொண் டிருக்க முடியவில்லேயாம். வாரம் ஒரு படம்; முதல் வகுப்பு — போக வர வாடகைக் கார். அதுவும் இந்த ஆறு மாதங்களாய் அவன் வாய் திறந்தால், கடைசியாய் அவள் ஒரே பதிலில் அவனேக் கீழே தள்ளிவிடுகிறாள்.

''என்னுடை சங்கிலியை மீட்டுக் கொடுங்க. நான் ஊருக்குப் போகிறேன். ஒரு மாசம் உங்களுக்கு நிம்மதி; செலவும் மிச்சம்.''

சங்கிலி இல்லாமலே சிவகாமி பிறந்த வீட் டுக்குப் போய்விட்டாள். போகட்டும். 'ஒரு மாசம் என்ன? ஒரு வருஷம் அங்கேயே இரு. சிவகாமி! நான் இந்த வேலேயை விட்டுவிட் டால் என்ன செய்வே ? சபாபதி என்ன

# "நாகரீக நங்கைகள் மிகவும் புத்திசாலிகள்"

(அவர்கள் ப்ரூ வாங்குகிறார்கள்)

சுமார் நான்கு ரூபாய்க்கு 30 கப்புகளுக்கு மேல், ஸ்ட்ராங்கான காபி கிடைப்பதாக என் மருமகள் பத்மா சொன்னபோது நான் ஆச்சரியமடைந்தேன்.

**ஒவ்வொரு கப் ப்ரூவுக்கும் வறுத்து அரைத்த சிறந்த காபியின் விலையைவிட அதிகமில்லை**

தலைமுறை தலைமுறையாக நாங்கள் 'காபித் தூளை'யே உபயோகித்து வருகிறோம்.

இப்பொழுது இன்ஸ்டண்ட் காபிகளில் ப்ரூ ஒன்றையே விரும்பி சாப்பிடுகிறோம். ஏனென்றால் ப்ரூவின் ருசி சிறந்த காபியின் ருசியே தான். ப்ரூ ஸ்ட்ராங்கானது. திடமானது. சிறந்த மணம் கொண்டது. அனைத்தையும்விட என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது அதன் நயமான விலையே.

அவசரத் தேவைக்கு ப்ரூ ரொம்பவும் சௌகரியமானது. ஆறிய டிகாக்ஷனை சூடுபண்ண வேண்டியதில்லை. சேதமுமில்லை.

தற்காலப் பெண்கள் கெட்டிக்காரர்கள். என் பத்மா அறிவாளியும்கூட.

**ப்ரூ ருசி சிறந்த காபியின் ருசி**




OBM-3301C/3 TAM

செய்வார்? தபால் எழுதுவதை நிறுத்திக் கொண்டு ஒரேயடியாய்ப் பேசாமல் இருந்து விடுவாரா?'

பிற்பகல் இரண்டு மணிக்குத் தாமஸ் மறுபடியும் வந்தான்.

''சார்! உங்களைப் பார்க்க ஒருத்தர் மேலே வந்திருக்கார்.''

''என்னைப் பார்க்கவா?''

யாராக இருக்கும்? சபாபதியாகத்தான் இருக்க வேண்டும். ரங்கதுரை பேனாவை மூடிவிட்டு எழுந்தான். ஆனால் உடனே மறுபடியும் நாற்காலியோடு உட்கார்ந்துகொண்டு விட்டான்.

''யார் என்று கேட்டியா?''

''இல்லே, சார்!''

''கறுப்பா, குள்ளமா மூக்குக் கண்ணாடி போட்டுக் கொண்டு—''

''ஆமாம், சார், கொஞ்சம் வயசானவரா, ரொம்ப இளைச்சுப் போய்......''

''...... அவர்தான்! நீ என்ன சொன்னே?''

''இங்கேயே உட்காருங்க. மேலே மாடியிலே போய்ப் பார்த்துட்டு வரேன்னு சொன்னேன்.''

ரங்கதுரையின் மனத்தில் அவசரமாக ஒரு சிந்தனை குறுக்கிட்டது.

''தாமஸ், இதோ பார்! அவர்கிட்டே நான் இல்லே, மூணு நாள் லீவிலே ஊருக்குப் போயிட்டேன்னு சொல்லிவிடு.''

''அவ்வளவுதானே? சொல்றேன் சார்!''

ரங்கதுரை நாற்காலியில் இன்னும் அழுத்தப்பட்டவன் போல் உட்கார்ந்து கொண்டான். தாமஸ் திரும்பி வரப் பத்து நிமிஷங்களாயின.

''சொன்னேன் சார்!'' என்றான் தாமஸ்.

''அப்புறம்?''

''அவர் போயிட்டார். ஒரு கடிதாசியிலே ஏதோ அவசரமா நாலு வரிகளை எழுதினார். உங்ககிட்டே, நீங்க வந்தப்புறம் கொடுக்கச் சொன்னார். இந்தாங்க.''

ரங்கதுரை கடிதத்தை வாங்கிப் படித்தான்.

''என் மகன் போன மாசம் செத்துப் போயிட்டான். இனிமேல் எனக்குக் கிராமத்திலே எதுவுமே இல்லே. வீட்டை விற்றுவிட்டேன். வடக்கே ஒவ்வொரு ஊராகப் பார்த்துக் கொண்டே போகப் போகிறேன். உன்னைப் பார்த்து இதைச் சொல்லிவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன். நீ எனக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைத் திருப்பிக் கொடுக்க வேண்டாம். அது உன்னிடமே இருக்கட்டும். என் அன்பும், ஆசியும் — சபாபதி.''

ரங்கதுரை வேகமாக எழுந்தான்.

''தாமஸ்! அவர் போயிட்டாரா?''

''அப்பவே போயிட்டார் சார்!''

இருந்தாலும் அவன் மாடிப் படிகளை நோக்கி அவசரமாக விரைந்தான்.

''சார்! எங்கே போறீங்க? நீங்க போய் அவரைப் பிடிக்க முடியாது. அவர் அப்பவே போயிட்டார்.'' — தாமஸின் குரல் அவனுடைய அவசரத்தை அர்த்தமற்றதாக்கிக் கொண்டிருந்தது.

ஆனாலும் ரங்கதுரை வேகமாகப் போய்க் கொண்டிருந்தான்.

# மௌனக் குயில்



வெள்ளைத் துகிலைப் பூண்டிருக்கும்
வெறுமை உளத்தை ஆண்டிருக்கும்!
கன்னுயிழ் கண்கள் களைத்திருக்கும்
கற்புத் திருவுருவம் இளைத்திருக்கும்!

வெள்ளம் கண்ணீர் வடிவிருக்கும்
வெறுப்பும் துயரும் குடியிருக்கும்!
உள்ளம் உறவை நினைத்திருக்கும்
உன்னுள் அவலம் அணைத்திருக்கும்!

இமையில் கண்ணீர் காத்திருக்கும்
இளமை மனமும் பூத்திருக்கும்!
சுமையும் வாழ்வில் சேர்ந்திருக்கும்
சுமக்கும் நெஞ்சம் சோர்ந்திருக்கும்!

- இடைப்பாடி கமலக்கண்ணன்

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# சுகரிஷியின் வரவேற்பு

அதிசயமான பயங்கரச் சம்பவங்கள் நிகழ்ந்த அன்றிரவில், அசோகபுரத்துப் பாழடைந்த புத்த விஹாரத்தில் என்ன நடந்தது என்று இப்போது பார்ப்போம்.

அந்த விஹாரத்தில் தன்னந் தனியாக வசித்து வந்த வயோதிக பிக்ஷு இருண்ட சைத்தியத்தில் நாகநந்தியுடன் பேசிவிட்டுத் திரும்பி வந்தவுடனேயே ஆயனரிடம் அங்கிருந்து உடனே புறப்பட்டுச் செல்வது நலம் என்று பிரஸ்தாபித்தார்.

சிவகாமியை அழைத்து ஆயனர் கேட்டபோது, சிவகாமி ஓரே பிடிவாதமாக அங்கிருந்து கிளம்ப முடியாதென்று சொல்லி விட்டாள். அங்கே சண்டை நடக்கலாமென்று பிக்ஷு சொன்னது அங்கே இருப்பதற்கு அவளுடைய ஆவலை அதிகமாக்கிற்று. அப்படி நடக்கும் சண்டையைக் கண்ணாலே பார்க்க வேண்டும் என்ற விசித்திரமான ஆசை அவள் உள்ளத்தில் உதித்தது. அந்த ஆசையின் மூல காரணம் மாமல்லர் போர்க்களத்திலே நிகழ்த்தும் வீரச் செயல்களைப் பார்க்க வேண்டுமென்பதுதான். அவளுடைய கற்பனைக் கண்ணின் முன்னால் போர்க்களக் காட்சிகள் தென்படலாயின. நாற்புறமும் சூழ்ந்து வரும் எதிரிகளுக்கு மத்தியில் மாமல்லர் தன்னந் தனியாக நின்று வாளைச் சுழற்றி எதிரிகளின் தலைகளை வெட்டிவீழ்த்துவது போல் அவள் கற்பனை செய்து கொள்வாள்.



மறுகணம் அந்தக் கற்பனைக் காட்சியின் கோரத்தைக் காணச் சகியாமல், மனத்தை விட்டு அந்தக் காட்சியை அகற்றிவிட முயல்வாள்.

இரவு ஒரு ஜாமம் ஆனபிறகு மறுபடியும் அந்த வயோதிக பிக்ஷு ஓடி வந்து, ''அபாயம்! அபாயம்! உடனே கிளம்புங்கள்! இல்லா விட்டால் தப்பிப் பிழைக்க முடியாது!'' என்று உரத்த குரலில் பரபரப்புடன் கூறினார்.

''அடிகளே! இன்னும் என்ன புது அபாயம் நமக்கு வரப் போகிறது?'' என்று ஆயனர் அவநம்பிக்கையுடன் கேட்டார்.

''இங்கே யுத்தம் நடக்கலாம் என்று நான் முன்னே சொன்னது, உண்மையைச் சொன்னால் ஒருவேளை நீங்கள் நம்பமாட்டீர்கள் என்றுதான். திருப்பாற்கடல் ஏரி உடைத்துக்கொள்ளும் போலிருக்கிற தென்று கேள்விப்பட்டேன். அதனால்தான் போய்விடலாமென்று யோசனை சொன்னேன். இப்போது உண்மையாகவே ஏரி உடைத்துக் கொண்டு விட்டது. உடனே கிளம்புங்கள்!'' என்றார்.

''சுவாமி! ஏரி உடைத்துக் கொண்டால் என்ன? அதற்காக நாம் ஏன் ஓட வேண்டும்?'' என்று சிவகாமி சாவதானமாகக் கேட்டாள்.

''திருப்பாற்கடல் ஏரியை நீ பார்த்திருந்தால் நீ இப்படிச் சொல்ல மாட்டாய்! நாளைப் பொழுது விடிவதற்குள் இங்கேயெல்லாம் ஒரே வெள்ளமாய் இருக்கும்!'' என்றார் பிக்ஷு.

சிவகாமி ஆயனர் பக்கம் திரும்பி, ''அப்பா! நான் வெள்ளமே பார்த்த தில்லை. நாம் இங்கேயே இருந்து வேடிக்கை பார்க்கலாம். பிக்ஷு வேணுமானால் போகட்டும்!'' என்றாள்.

''பெண்ணே! அறியாமையால் பிதற்றுகிறாய்! வெள்ளம் வந்தால் வேடிக்கையாயிராது! பனை மர உயரம் பிரம்மாண்டமாக வரும். இந்த விஹாரம், சைத்தியம் எல்லாம் முழுகிப் போய்விடும். அப்புறம் என்ன வேடிக்கையைப் பார்க்கிறது?''

''சுவாமி! அவ்வளவு நிச்சயமாகச் சொல்லுகிறீர்களே! தங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று ஆயனர் கேட்டார்.

''பத்து வருஷங்களுக்கு முன்னால் இப்படித்தான் ஒரு தடவை திருப்பாற்கடல் ஏரி உடைப்பு எடுத்துக் கொண்டது. அப்போது நானே பார்த்திருக்கிறேன். இந்தப் பள்ளத்தாக்கில் ஆயிரக் கணக்கான ஜனங்கள் செத்துப் போனார்கள். மீதியிருந்தவர்கள் இங்கே குடியிருப்பது அபாயம் என்று வேறு மேட்டுப் பாங்கான இடங்களுக்குக் குடி போய் விட்டார்கள். அந்த வெள்ளத்துக்குப் பிறகுதான் இந்த அசோகபுரம் இப்படிப் பாழடைந்து கிடக்கிறது!''

இதையெல்லாம் கேட்டபோது ஆயனருக்கும் சிவகாமிக்கும் மனக் கலக்கம் உண்டாயிற்று. ஆயினும், இரவில் அங்கிருந்து கிளம்ப அவர்கள் மனம் இசையவில்லை. அதோடு அப்போது பெருங்காற்றும் மழையும் ஆரம்பித்திருந்தன.

சிவகாமி திடீரென்று நினைத்துக் கொண்டு ''அப்பா! குண்டோதரன் சாயங்காலம் வந்தான்; மறுபடியும் மாயமாய் மறைந்து விட்டானே? இந்தக் காற்றிலும் மழையிலும் எங்கே அகப்பட்டுக் கொண்டானோ, தெரியவில்லையே?'' என்று கவலையுடன் கூறினாள்.

''அவனுடைய நடவடிக்கையே இப்போதெல்லாம் விசித்திரமாகத்தான் இருக்கிறது!'' என்றார் ஆயனர்.

''அதோ கேளுங்கள் சத்தத்தை!'' என்றார் பிக்ஷு.

ஆம்; அதுவரையில் கேளாத ஒரு புதுவிதமான சத்தம் இப்போது இலேசாகக் கேட்டது.

ஆயனருக்கும் சிவகாமிக்கும் மனக் கலக்கம் அதிகமாயிற்று. சிவகாமி, ''அது என்ன சத்தம்?'' என்றாள்.

''ஏரி உடைத்துக்கொண்டு விட்டது. நாளைப் பொழுது விடிவதற்குள் இங்கே ஒரே வெள்ளமாயிருக்கும்'' என்றார் பிக்ஷு.

''தெருவெல்லாம் தண்ணீர் ஓடுமோ? இந்த விஹாரத்துக்குள்ளே கூட ஜலம் வந்துவிடுமோ?'' என்றாள் சிவகாமி.

''விஹாரத்துக்குள்ளே மட்டுமில்லை; விஹாரத்துக்கு மேலேயும்கூட வந்துவிடும்!'' என்றார் பிக்ஷு.

''சுவாமி! இப்போது என்ன யோசனை சொல்கிறீர்கள்?'' என்று ஆயனர் கவலையுடன் கேட்டார்.

''இப்போது நான் என்ன யோசனை சொல்வது? சாயங்காலமே போய்விடலாம் என்று சொன்னேன். நீங்கள் கேட்கவில்லை. பக்கத்திலுள்ள கிராமத்துக்குப் போய் ஒரு பானைத் தெப்பம் கொண்டு வருகிறேன். அதுவரையில் நீங்கள் இங்கேயே இருங்கள். இன்றிரவு நாம் தப்பிப் பிழைத்தால், புத்த பகவானுடைய கருணைதான். ஆஹா! நாகநந்தியடிகள் எப்பேர்ப்பட்ட பொறுப்பை என்னிடம் ஒப்படைத்து விட்டுப் போய் விட்டார்!''

இவ்விதம் கூறிவிட்டு அந்த வயோதிகப் புத்த பிக்ஷு நள்ளிரவில் புயலிலும்

மழையிலும் விஹாரத்திலிருந்து வெளியில் சென்றார்.

புத்த பிக்ஷு வெளியில் போய்ச் சற்று நேரத்துக்கெல்லாம் அவர் கூறிய படியே உடைப்பு வெள்ளம் அசோகபுரத்தை அடைந்து விட்டது. முதலில் கொஞ்சமாகத்தான் வந்தது. அப்புறம் மளமளவென்று பெருக ஆரம்பித்து விட்டது. விஹாரத்துக் கதவுகளின் இடுக்கு வழியாகத் தண்ணீர் உள்ளே வரத் தொடங்கியது. சிறிது நேரத்துக்கெல்லாம் கதவுகளைப் பிளந்து தள்ளிவிட்டு உள்ளே குபுகுபுவென்று பாய ஆரம்பித்தது.

வெள்ளம் பெருகத் தொடங்கியதும் ஆயனர் முதலியோர் முதலில் விஹாரத்தின் வெளி வாசல் திண்ணையில் வந்து நின்றார்கள். ஆனால், மழை, புயல், மின்னல் அசாத்தியமாயிருந்தபடியால் அங்கே நிற்க முடியவில்லை. பிறகு உள்ளே சென்றார்கள். உள்ளே தண்ணீர் புகுந்ததும் மேடைகளில் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். மேடைகளிலும் தண்ணீர் வந்ததும், மேல் தளத்துக்குப் போகும் மச்சுப் படிகளில் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். அப்படியும் அவர்களை விடாமல் தண்ணீர் மேலே வந்து கொண்டிருந்தது.



''அப்பா! என் அசட்டுத்தனத்தினால் உங்களை இந்தக் கதிக்கு ஆளாக்கினேன்!'' என்று சிவகாமி ஆயனரின் கழுத்தைக் கட்டிக் கொண்டு புலம்பினாள். ''ஐயோ! இந்த மானையும் கிளியையும் எதற்காக அழைத்து வந்தேன்?'' என்று வருந்தி, அவற்றை அன்புடன் தடவிக் கொடுத்தாள்.

மானும் கிளியும் ஏதோ பெரிய ஆபத்து வந்திருக்கிறது என்பதை உணர்ந்து சிவகாமியின் அருகில் வந்து ஒட்டிக் கொண்டு நின்றன.

''குழந்தாய்! நீ என்ன செய்வாய்? இப்படி நாம் கூண்டோடு கைலாசம் போக வேண்டும் என்று விதி இருக்கும் போது எப்படித் தடுக்க முடியும்? அந்த நாகநந்தியின் பேச்சைக் கேட்டு இப்படியாயிற்று!'' என்று ஆயனர் கூறிச் சிவகாமியின் முதுகில் அருமையுடன் தட்டிக் கொடுத்தார்.

''நாகநந்தியின் மேல் ஒரு தவறும் இல்லை. எல்லாம் மாமல்லரால் வந்தது, அப்பா!'' என்றாள் சிவகாமி.

சிவகாமியின் உள்ளம் அன்றிரவு அடிக்கடி மாமல்லரின்பால் சென்று கொண்டிருந்தது. வாசலில் நின்று தன்னைப் பார்த்தவர் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் போய் விட்டதை நினைத்து அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது. அவர் நின்று பேசித் தங்களையும் கூட அழைத்துப் போயிருந்தால் இப்படி நேர்ந்திராதல்லவா?

எனவே, இந்த வெள்ளத்தில் நாம் செத்துப் போவதே நல்லது. 'நம்மை இங்கே பார்த்துவிட்டுச் சென்ற மாமல்லருக்கு ஒரு நாள் இல்லா விட்டால் ஒரு நாள் நாம் இங்கே வெள்ளத்தில் மூழ்கிச் செத்துப்போனது தெரியாமல்போகாது. அப்புறம், அவர் வாழ்நாளெல்லாம் இதை நினைத்து நினைத்துத் துக்கப்படுவாரல்லவா? சற்று நின்று சிவகாமியுடன் பேசாமல் வந்து விட்டோமே என்று வருத்தப்படுவாரல்லவா? படட்டும்! படட்டும்! அவ்வளவு கல் நெஞ்சமுடைய மனிதருக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும்! அப்படி அவரை வருத்தப்படுத்துவதற்காகவே நாம் இங்கே வெள்ளத்தில் செத்துப் போவது நல்லதுதான்! ஆனால், பாவம் அப்பாவும் அத்தையும், ரதியும் சுகரும் ஏன் இந்தக் கதிக்கு உள்ளாக வேண்டும்? பகவானே! திடீரென்று ஏதாவது ஓர் அற்புதம் நேரக் கூடாதா? தன்னைத் தவிர மற்றவர்கள் உயிர் பிழைக்கக் கூடாதா? நான் மட்டும் சாகக் கூடாதா? தன்னுடைய துரதிர்ஷ்டம், தலைவிதி, அவர்களையும் ஏன் பற்ற வேண்டும்?

இப்படிப்பட்ட எண்ணங்களில் எவ்வளவு நேரம் போயிருக்கும் என்று தெரியாது. புயலும் மழையும் கொஞ்சம் ஓய்ந்திருப்பது போலத் தோன்றியது. மச்சுக்குப் போய்ப் பார்க்கலாம் என்று நினைத்து எல்லோரும் மேலே போனார்கள். உண்மையாகவே, புயல் ஓய்ந்து மழையும் விட்டிருந்தது. சிறு தூற்றல்தான் தூறியது. கீழ்த் திசையில் பரவியிருந்த மங்கலான வெளிச்சம் விரைவில் உதயமாகப் போகிறதென்பதைக் காட்டியது.

அந்த உதய நேரத்து ஒளியில் ஆயனர் முதலியோர் சுற்றும் முற்றும்

# ஆபத்தான "சாலை முறிநெளிவிலே" ஷேவர் ஸ்விஷ் *

• பந்தயப் பாதையில் ஓர் பயங்கரமான திருப்பம்.
















**ஒவ்வொரு முறையும் இதே கதை:**

**ஸ்விஷ் க்ஷவரம் செய்து கொள்பவரை மிஞ்சுவதற்கில்லை**

# "கீதா"வின் பரிசுத் திட்டம்

எண்ணற்ற வாடிக்கையாளர்கள் கலந்து கொண்டு
பயனடையும் இனிய பரிசுத் திட்டம்

பரிசுத் திட்டத்தில் சேர்ந்தவுடன்
அழகிய பரிசுப் பொருளும் உண்டு

## பரிமளிக்கும் அழகு



மாலைத் தென்றல் மேனியில் படர
மங்கள மங்கையர் உள்ளம்
கலந்து உறவாட உன்னதமான
பட்டு ஜவுளி ரகங்கள்.

இளைய சமுதாயத்தினரின் எழுச்சி
யூட்டும் எண்ணற்ற டிசைன்கள்.
உங்கள் அழகுக்கு அழகூட்ட
ஆயிரமாயிரம் ரகங்கள் அள்ளி
வழங்குகிறது கீதா.

தேவையானவற்றை எங்களின்
கண்ணாடிமாளிகையில்
தனித்தனி மாடியில்
தேர்ந்தெடுங்கள்

**கீதா**
**சில்க் & சாரி பஜார்**
31-32, N. S. B. ரோடு,
திருச்சி-620002.

CROWN-18

பார்த்தபோது அவர்கள் என்றும் பாராத அதிசயமான காட்சி தெரிந்தது. எங்கெங்கும் ஒரே தண்ணீர்ப் பிரவாகமாயிருந்தது. சற்றுத் தூரத்திலிருந்த கிராமத்துக் குடிசை வீடுகளின் கூரையைத் தொட்டுக் கொண்டு வெள்ளம் ஓடிற்று. வீட்டுக் கூரைகளும், வைக்கோல் போர்களும், பெரிய பெரிய விருட்சங்களும் அந்தப் பெரு வெள்ளத்தில் மிதந்து சென்றன.

சிவகாமியின் உள்ளத்தின் அந்தரங்கத்தில், 'ஒருவேளை எங்கிருந்தாவது, எப்படியாவது மாமல்லர் நம்மைக் காப்பாற்றுவதற்காக வரக் கூடாதா?' என்ற எண்ணம் தோன்றியது. ''வீண் ஆசை!'' என்று அவளே தன்னைத் தானே திருத்திக் கொள்ள முயன்றாள்.

ஆனால், இதென்ன விந்தை! — கனவு காண்கிறோமா? — சித்தப் பிரமையா?— அல்லது உண்மைதானா? — நடக்காத காரியம் நடக்கிறதே? — கைகூடாத ஆசை கைகூடுகிறதே? — அதோ வெள்ளத்தில் நீந்திக் கொண்டு வரும் குதிரை மேல் இருப்பவர் மாமல்லர் தானே? கண்களே! சரியாகப் பாருங்கள்! நெஞ்சே! கொஞ்சம் நிதானித்துக்கொள். —ஆம், ஆம்; அவர் தான் சந்தேகமில்லை! நடராஜப் பெருமானே, பராசக்தித் தாயே! அருள் புரியுங்கள்; மீதியுள்ள தூரத்தை அவர் அபாயமில்லாமல் கடந்து வந்து சேர வேண்டுமே?— அப்பா! அப்பா! யார் வருகிறார் என்று பார்த்தீர்களா? அத்தை? நீ பார்த்தாயா? — ரதி! உனக்குக் கண் தெரிகிறதா? சுகப்பிரம்ம ரிஷியே! உமக்கு வாய் அடைத்துப் போய் விட்டதா, என்ன?

உண்மையில் சுகப்பிரம்ம ரிஷிக்கு வாய் அடைத்துப் போகவில்லை; இரண்டு மூன்று தடவை தலையை இந்தப் புறமும், அந்தப் புறமும் வளைத்துப் பார்த்துவிட்டுச் சுகப்பிரம்ம ரிஷி, 'மாமல்லா! மாமல்லா!' என்று கூறி வரவேற்புக் கூறினார்.

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

# பானைத் தெப்பம்

சுகரின் வரவேற்புக் குரலைக் கேட்டதும் மாமல்லரின் முகத்தில் புன்னகையின் சாயை தோன்றியது. சிவகாமி கிளியை அடிப்பதற்காகக் கையை ஓங்க, கிளி அவளுடைய அடிக்குத் தப்பி இறகுகளைச் சடசடவென்று அடித்துக் கொண்டு ஒரு வட்டமிட்டு வந்து சிவகாமியின் தோள்களில் உட்கார்ந்த காட்சி, அவருடைய முக மலர்ச்சியை அதிகமாக்கின.

அச்சமயம் விஹாரத்தின் ஓரமாகப் பானைத் தெப்பத்தில் வந்து கொண்டிருந்த குண்டோதரனை மாமல்லர் பார்த்தார். கையின் சமிக்ஞையினால் ''நில்லு!'' என்று ஆக்ஞையிட்டார்.

அதே நேரத்தில் மேலேயிருந்து குனிந்து பார்த்த சிவகாமி, ''அப்பா! இதோ குண்டோதரனும் வந்துவிட்டானே! பானைத் தெப்பம் கொண்டு வருகிறான்!'' என்று கூறிக் கையைக் கொட்டி மகிழ்ந்தாள். இரவெல்லாம் அவளுடைய மனத்தில் குடிகொண்டிருந்த கவலையும் பீதியும் மறைந்து இப்போது ஏதோ பெரிய வேடிக்கையில் ஈடுபட்டிருப்பது போன்ற குதூகலம் காணப்பட்டது.

தெப்பம் விஹாரத்தின் தூண்களின் மீது இடிக்காதபடி குண்டோதரன் அதைச் சாமர்த்தியமாகத் திருப்பி விட்டுக் கொண்டு மாமல்லரின் குதிரையண்டை வந்தான். ''பிரபு! படகுக்கு வந்துவிடுங்கள்!'' என்றான்.

''யார் அப்பா நீ? எங்கேயோ பார்த்த மாதிரியிருக்கிறதே!'' என்று மாமல்லர் கேட்டார்.

''சத்ருக்னனுடைய ஆள், சுவாமி'' என்று கூறிக் குண்டோதரன் தலைப்பில் முடிந்து வைத்திருந்த இலச்சினையைக் காட்டினான்.

''இங்கே எப்படி வந்து சேர்ந்தாய்?''

''என்னுடைய எஜமானரின் உத்தரவின் பேரில் எட்டு மாதங்களாக இவர்களுடன் இருக்கிறேன், பிரபு!'' என்றான் குண்டோதரன்.

''தெப்பம் எப்படிக் கிடைத்தது?''

''ஒரு வயோதிக புத்தபிக்ஷு தள்ளிக் கொண்டு வந்தார். அவரை வெள்ளத்தில் நான் தள்ளிவிட்டு இதைக்கொண்டு வந்தேன்.''

''பிக்ஷுவையா வெள்ளத்திலே தள்ளினாய்? அட பாவி! ஏன் அப்படிப்பட்ட காரியத்தைச் செய்தாய்?''

''தெப்பத்தில் அவருக்கு இடம் காணுதென்றுதான்! தங்களையும் சேர்த்துக் கணக்குப் பண்ணிப் பிக்ஷுவுக்கு இடம் காணாதென்று பிடித்துத் தள்ளினேன்!''

''நான் வருவேன் என்று எப்படித் தெரியும்?''

''அதுகூடத் தெரியாவிட்டால் மகேந்திர பல்லவரின் ஒற்றர் படையிலே இருக்க முடியுமா, பிரபு!''

மாமல்லர் குதிரையின் முதுகிலிருந்து தாவி, பானைத் தெப்பத்தில் வெகு லாகவமாக ஏறிக் கொண்டார். பிறகு குதிரையின் முகத்தை இரண்டு

தடவை தடவிக் கொடுத்து, அருமை ததும்பிய குரலில், ''தனஞ்சயா! எங்கேயாவது ஓடித் தப்பிப் பிழைக்கப் பார்! கடவுள் உன்னைக் காப்பாற்று வார்!'' என்று கூறினார்.

உடனே, தனஞ்செயன் என்னும் அந்தக் குதிரை, வெள்ளத்தில் வேகமாக நீந்திக் கொண்டு, மரங்கள் இரு வரிசையாகத் தண்ணீருக்கு மேலே தலை நீட்டிக் கொண்டிருந்த சாலையை நோக்கிச் சென்றது.

* * *

குண்டோதரனும் மாமல்லரும் பானைத் தெப்பத்தைப் பத்திரமாகச் செலுத்திக் கொண்டு விஹாரத்தண்டை சென்றார்கள். மேல் மச்சில் இருந்தவர்களைத் தெப்பத்தில் இறக்குவதற்கு வெகு பிரயாசையாகப் போய்விட்டது. முக்கியமாக, சிவகாமிதான் அதிகத் தொந்தரவு கொடுத்தாள். சற்று முன்னால் வெள்ளத்திலே சாவதற்குத் துணிந்திருந்தவளுக்கு இப்போது உயிரின் மேலே அளவில்லா ஆசையும் வெள்ளத்தைக் கண்டு பெரும் பயமும் உண்டாகியிருந்தன.

யார் முதலில் தெப்பத்தில் இறங்குவது என்பதிலேயே தகராறு ஏற்பட்டது. ரதியை முதலில் இறக்கப் பார்த்தார்கள். அது ஒரே பிடிவாதம் பிடித்து இறங்குவதற்கு மறுத்தது.

ஆயனர் ரொம்பவும் வற்புறுத்திச் சொன்னதன் பேரில் சிவகாமி இறங்கச் சம்மதித்தாள். மேலேயிருந்து ஆயனரும் அத்தையும் பிடித்து இறக்க, கீழே தெப்பத்திலிருந்து மாமல்லர் கைகளினால் அவளைத் தாங்கி இறக்கிவிட்டார். இறங்கியதும், தெப்பம் ஆடியபோது, சிவகாமி ரொம்பவும் பயந்து அலறினாள். மாமல்லர் அவளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு உட்கார வைத்துத் தைரியம் சொன்னார்.

பிறகு, அத்தையும் ஆயனரும் இறங்கியபோது தெப்பம் ஆடியதனாலும் சிவகாமிக்குப் பயம் ஏற்பட்டது.

சுகர், மேலே வட்டமிட்டுக் கொண்டே இருந்தவர், எல்லாரும் தெப்பத்தில் இறங்கியதும், தாமும் வந்து ஒரு மூலையில் உட்கார்ந்து அண்ணாந்து பார்த்து, ''ரதி! ரதி!'' என்று கூவினார். அப்போது தெப்பம் கொஞ்சம் நகரவே, ''ஐயோ! ரதியை விட்டு விட்டுப் போகிறோமே!'' என்று சிவகாமியும் சேர்ந்து அலறினாள்.



ரதி மேலேயிருந்து ஒரே தாவாகத் தாவித் தெப்பத்தில் குதித்தது. அதனுடைய முன்னங்கால் ஒன்று தெப்பத்துக்கு அப்பால் தண்ணீருக்குள் இறங்கி விடவே, மறுபடியும் சிவகாமி, ''ஐயையோ!'' என்று கூச்சலிட்டாள்.

எல்லோரும் உட்கார்ந்து எல்லாம் ஒழுங்கான பிறகு, குண்டோதரன், ''பிரபு! சற்றே படகை நிறுத்தி வையுங்கள். இதோ வந்துவிடுகிறேன்'' என்று சொல்லி விட்டு, தெப்பத்திலிருந்து குதித்து நீந்திக் கொண்டு, விஹாரத்துக்குள்ளே போனான்.

குண்டோதரனுக்கு ஆபத்து வந்து விடப் போகிறதே என்ற கவலை சிவகாமியைப் பிடித்தது. அவன் திரும்பி வருவதற்குள், நேரமாக ஆக அவளுடைய ஆர்ப்பாட்டமும் அதிகமாயிற்று.

கடைசியாக, குண்டோதரன் மேல் மச்சின் வழியாக எட்டிப் பார்த்து, ''இதோ வந்துவிட்டேன்!'' என்றான். அவன் கையிலே ஒரு மூட்டை இருந்தது. மூட்டையை முதலிலே கொடுத்து விட்டுக் குண்டோதரனும் தெப்பத்தில் இறங்கியதும், ''மூட்டையில் என்ன?'' என்று ஆயனர் கேட்டார்.

அத்தை மூட்டையைத் தொட்டுப் பார்த்துவிட்டு, ''அவல்!'' என்று தெரிவித்தாள்.

''இந்த ஆபத்தான சமயத்தில்கூடக் குண்டோதரன் வயிற்றுப்பாட்டை மறக்கவில்லை!'' என்று சொல்லிச் சிவகாமி சிரித்தாள்.

''உங்களுக்குத்தான் என் விஷயம் தெரியுமே, அம்மா! நான் எது பொறுத்தாலும் பொறுப்பேன்; பசி மட்டும் பொறுக்க மாட்டேன்!'' என்றான் குண்டோதரன்.

''நல்ல முன்யோசனைக்காரன்!'' என்றார் மாமல்லர்.

''சமய சஞ்சீவி என்றால் நம் குண்டோதரன்தான்! பிக்ஷு அவல் வைத்திருந்தது உனக்கு எப்படி அப்பா தெரிந்தது?''

இப்படிக் குண்டோதரனை எல்லோரும் பாராட்டிய பிறகு, தெப்பத்தின் ஒரு முனையில் குண்டோதரனும், இன்னொரு முனையில் மாமல்லருமாக உட்கார்ந்து, தெப்பத்தைச் செலுத்தினார்கள்.

விரைவாக ஓடிய வெள்ளத்தில் பானைத் தெப்பம் இலகுவாக மிதந்து சென்றது. ஆனால், வழியில் தென்பட்ட மரங்களில் மோதாமலும் வெள்ளத்திலே வந்த கட்டைகள் தாக்காம

னும் தெப்பத்தை மிக ஜாக்கிரதையாக விடவேண்டியிருந்தது.

வானத்தில் மேகங்கள் இன்னும் குமுறிக் கொண்டிருந்தன. காற்றின் வேகம் குறைந்து போயிருந்ததென்றுலும், இலேசாக அடித்த காற்று உடம்பில் சில்லென்று பட்டது. அவ்வப்போது நீர்த் துளிகள் கிளம்பிச் சுரீரென்று மேலே விழுந்தன.

சற்று நேரத்துக்கெல்லாம் சிவகாமியின் பயம் பறந்துவிட்டது. குதூகலமாய்ச் சிரிக்கவும் விளையாடவும் ஆரம்பித்துவிட்டாள்.

"இப்படியே தெப்பத்தில் எத்தனை நாள் போய்க் கொண்டிருப்போம்?" என்று அவள் மாமல்லரைப் பார்த்துக் கேட்டாள்.

"ஏன்? கஷ்டமாயிருக்கிறதா?" என்றார் மாமல்லர்.

"இல்லை, இல்லை. இந்தத் தெப்போத்ஸவம் முடிந்துவிடப் போகிறதே என்றுதான் கவலையாயிருக்கிறது" என்றாள் சிவகாமி.

"முடியக் கூடாதா?"

"ஆமாம்; இப்படியே முடிவில்லாமல் என்றென்றைக்கும் வெள்ளத்தில் மிதந்து போய்க் கொண்டிருந்தால் என்ன?"

"ஒருவேளை நீ நினைக்கிறபடி நடந்தாலும் நடக்கலாம். இந்த வெள்ளம் நேரே சமுத்திரத்தில் போய்த்தான் சேரும். தெப்பமும் சமுத்திரத்துக்குப் போய்விட்டால்...."

"முடிவேயில்லாமல் மிதந்துகொண்டிருக்கலாம் அல்லவா? ஒன்று மட்டும் சந்தேகமாயிருக்கிறது."

"என்ன சந்தேகம், சிவகாமி?"

"இதெல்லாம் கனவா, உண்மையா என்றுதான்."

"கனவு என்பதாக ஏன் உனக்குத் தோன்றுகிறது?"

"இம்மாதிரி தெப்பத்தில் ஏறி முடிவில்லாத வெள்ளத்தில் மிதந்து செல்வதாக அடிக்கடி நான் கனவு காண்பது உண்டு. அதனாலேதான் இதுவும் ஒருவேளை கனவோ என்று சந்தேகப்படுகிறேன்."

"இந்த மாதிரி சம்பவம் ஒரு நாள் நேரிடக்கூடும் என்று நான் எப்போதும் எண்ணியது கிடையாது. ஆகையால், எனக்கு இது கனவோ என்று சந்தேகமாயிருக்கிறது."

"ஆனால், என்னுடைய கனவுக்கும் இப்போது நடப்பதற்கும் ஒரு வித்தியாசம் உண்டு: கனவில் நான் காணும் படகிலே நானும் இன்னும் ஒரே ஒருவருந்தான் இருப்போம். இந்தப் படகிலே பலர் இருக்கிறோம்!"



"அந்த ஒருவர் யார்?"

"சொல்ல மாட்டேன்!"

பொழுது சாயும் சமயத்தில், கொஞ்ச தூரத்தில், பூமியும் பாறைகளும் மரங்களும் அடங்கிய காட்சியும் காணப்பட்டது. எப்போதும் முடிவில்லாமல் தெப்பத்தில் போய்க் கொண்டிருக்க ஆசைப்பட்ட சிவகாமிக்குக்கூட அந்தக் காட்சி ஆனந்தத்தை அளித்தது.

ஒவ்வொருவரும் தத்தம் மகிழ்ச்சியையும் திருப்தியையும் பலவிதமாகத் தெரிவித்தார்கள். குண்டோதரனுடைய முகத்தில் மட்டும் மலர்ச்சி காணப்படவில்லை.

"குண்டோதரா! இது என்ன இடம் தெரியுமா? இங்கே நாம் இறங்க வேண்டியதுதானே?" என்றார் மாமல்லர்.

"ஆம், பிரபு! இறங்க வேண்டியதுதான். ஆனால், தீவின் ஓரமாக வெள்ளத்தின் வேகம் கடுமை என்று தோன்றுகிறது. பாறைகள் வேறே இருக்கின்றன!" என்றான் குண்டோதரன்.

தெப்பத்தை அவர்கள் அத்தீவை நோக்கிச் செலுத்த வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. தானாகவே வெள்ளத்தின் இழுப்பில் அகப்பட்டுத் தெப்பம் தீவை நோக்கிச் சென்றது. தீவை நெருங்க நெருங்க அதன் வேகம் அதிகமாயிற்று.

கரையோரமாக நின்ற சிறு சிறு பாறைகள் தெப்பத்திலிருந்தவர்களின் கண்களுக்குப் பிரம்மாண்ட மலைகளாகத் தோன்றின.

பாறைகளின் மீது மோதாமல் தெப்பத்தைத் தீவின் ஓரமாய்ச் செலுத்துவதற்குக் குண்டோதரனும் மாமல்லரும் தங்களாலான மட்டும் முயற்சி செய்தார்கள். ஆனால், தெப்பம் நேரே பாறையில் மோதுவதற்கே போவது போல் அதிவேகமாகப் போயிற்று! தெப்பத்தில் இருந்தவர்கள், "செத்தோம்!" என்று தீர்மானித்தார்கள். சுகப்பிரம்மரிஷி அலறிக்கொண்டு பறந்து போய்ப் பாறையில் உட்கார்ந்து கவலையுடன் பார்த்தார்.

தெப்பம் பாறையில் மோதிற்று. பானைகள் சடசடவென்று உடைபட்டன. மூங்கில்கள் நறநறவென்று முறிந்தன. தெப்பம் ஒரு சுற்றுச் சுற்றிவிட்டுத் தபதப வென்று தண்ணீரில் மூழ்கிற்று.

(தொடரும்)

அமெரிக்கா உலக யுத்தத்தில் சேரப் போகிற சமயம். அப்போது நியூயார்க்கில், ஜான் பிரன்னன் என்ற ஒரு போலீஸ் அதிகாரி இருந்தார். அவர் எல்லா மோட்டார் மாடல்களையும் நன்கு அறிந்தவர். அவர் அடிக்கடி சொல்லுவது வழக்கம்: ''ஒவ்வொரு மோட்டார் காரும் ஒரு தனி மனிதனைப் போன்றது. அதற்கென்று தனிப்பட்ட சில குணங்கள் உண்டு. அவற்றைக் கொண்டு அந்த மோட்டார் காரை எளிதில் அடையாளம் கண்டுகொண்டு விடலாம்'' என்று. கார் சம்பந்தப்பட்ட வழக்குகளில் கூட, ''வழக்கில் சம்பந்தப்பட்டது இந்தக் காராக இருக்கலாம் என்று சொல்லக் கூடாது. இந்தக் கார்தான் என்றுஉறுதியாகச் சொல்ல வேண்டும்'' என்று அவர் கூறுவார்.

ஒரு சமயம் தெருவில் போய்க் கொண்டிருந்த ஒரு குதிரை வண்டியை வேகமாகச் சென்று கொண்டிருந்த ஒரு கார் இடித்துத் தள்ளி விட்டது. போலீஸ் இன்ஸ்பெக்டர் அங்கு சென்றபோது வண்டி குடை சாய்ந்து கிடந்தது. குதிரைக்கு ஓர் அடியும் இல்லை. ஆனால் வண்டிக்காரர் அடிபட்டு மயக்கமாகக் கீழே விழுந்து கிடந்தார்.

மயக்கமாகிக் கிடந்த வண்டிக்காரரைப் பிழைக்க வைக்க எவ்வளவோ முயற்சி செய்தார்கள். முடியவில்லை. அவர் சில மணி நேரங்களில் மயக்கம் நீங்காமலேயே உயிர் நீத்துவிட்டார். ஆகவே அவர் வண்டியை மோதியது எந்தக் கார், எப்படி இருந்தது என்று போலீசுக்கு ஒரு தகவலும் இல்லை.

இத்தகைய விபத்துக்களில் போலீஸார், ஒரு சிறு தடயமாக இருந்தாலும் சரி, அதை மிகக் கவனமாக எடுத்து வைத்துக் கொள்வது வழக்கம். ஆகவே ஏதாவது தடயங்கள் கிடைக்குமா என்று தரையைத் தேடியபோது, இருபத்தோர் உடைந்த கண்ணாடித் துண்டுகள் கிடைத்தன. போலீஸ் இன்ஸ்பெக்டர் அந்த இருபத்தொரு துண்டுகளையும் சேகரித்து ஒரு பொட்டலமாகக் கட்டித் தம் மேலதிகாரியிடம் கொடுத்தார். அங்கங்கே தரையில் பெட்ரோல் ஒழுகியிருந்த சின்னங்கள் தென்பட்டதால் காரின் பெட்ரோல் டாங்குக்குச் சேதம் விளைந்திருக்க வேண்டும் என்றும், அதன் காரணமாக அது எங்காவது பட்டறையில்தான் இருக்க வேண்டும் என்றும் அவர் சொன்னார்.

அடுத்த நாள் காலை விபத்து நடந்த இடத்தை மீண்டும் பரிசோதித்தபோது காரின் டயரிலிருந்து வெட்டுண்டு விழுந்திருந்த மூன்று அங்குல நீளமுள்ள ஒரு சிறு டயர் பாகம் கிடைத்தது. இருபத்தொரு கண்ணாடித் துண்டுகளும், மூன்று அங்குல நீளமுள்ள சிறு டயரும்தான் கிடைத்த தடயங்கள். இவற்றை வைத்துக் கொண்டு அந்தக் காரைக் கண்டு பிடித்தாக வேண்டும். எப்படிக் கண்டுபிடிப்பது?

இதைக் கண்டுபிடிக்க ஜான் பிரன்னர்தான் சரியான ஆள் என்று தீர்மானித்து போலீஸ் மேலதிகாரி அவரைக் கூப்பிட்டு அனுப்பினார்.

''இச்சிறு தடயங்களைக் கொண்டு அந்தக் காரைக் கண்டுபிடிப்பது கஷ்டம்தான். இருந்தாலும் முயன்று பாருங்கள்'' என்று சொன்னார் அதிகாரி.




பத்து நாட்கள் கழித்து ஜான் பிரன்னன் போலீஸ் மேலதிகாரிக்குப் பின்வரும் ரிப்போர்ட் அனுப்பி வைத்தார்.

''குதிரை வண்டியை இடித்த கார் 1909 பேகார்ட், மாடல் 18 ஆகும். அது சாம்பல் வர்ணம் கொண்டது. அதனுடைய லைசன்ஸ் எண் 67388. அதன் சொந்தக்காரரின் பெயர் லூயி காஸெல்லா. அவர் நியூயார்க்கில் கிழக்குப் பகுதியில் 75வது தெருவில் 113ஆம் நம்பர் வீட்டில் வசிக்கிறார். வண்டி இப்பொழுது ஆலன் ஹர்ஸ்ட் என்னும் ஊரில் உள்ள டீல் என்பவர் நடத்தும் பட்டறையில் இருக்கிறது.''

மேலதிகாரி இந்த அறிக்கையை வைத்துக் கொண்டு அந்தக் காரின் சொந்தக்காரரான லூயி காஸெல்லாவை விசாரிப்பதற்காகப் போனார். ஆனால் காஸெல்லாவை வீட்டில்

காணவில்லை. அப்பொழுது பிரன்னன் மேலதிகாரியைப் பார்த்து, "கவலைப்படாதீர்கள். இதோ அவரைக் கண்டு பிடித்துக் கொடுக்கிறேன்" என்று சற்று யோசனை செய்தார். எங்கு போயிருக்கக் கூடும்? தம் வக்கீலைத்தான் தேடிப் போயிருப்பார் என்று பிரன்னன் தீர்மானித்து, அவருடைய வக்கீல் வீட்டுக்கு முன்னால், தெருவின் எதிர்ப் பக்கத்தில் உள்ள ஒரு டெலிபோன் சாவடியில் வெகு நேரம் ஒளிந்து கொண்டு நின்றார். கடைசியில் காஸெல்லா வக்கீல் வீட்டுக்கு வந்தார். காஸெல்லாவைப் பிடித்து விசாரணை செய்ததில் அவர் உண்மையை ஒப்புக் கொண்டார்.



# இருபத்தியொரு கண்ணாடித் துண்டுகள்

• நாகடாழ •

காரியாலயம் திரும்பியதும் மேலதிகாரி, பிரன்னனைப் பார்த்து, "ஒன்றுமில்லாத தடயங்களை வைத்துக் கொண்டு எப்படி இத்தனை விவரங்கள் கண்டு பிடித்தீர்கள்?" என்று கேட்டபோது பிரன்னன் விளக்க ஆரம்பித்தார்.

"நான் அந்தக் கண்ணாடித் துண்டுகளை ஆராய்ந்து பார்த்ததில் அவற்றில் இரண்டு விதமான லென்ஸ்களின் பாகங்கள் கலந்திருந்தன என்று தெரிந்து கொண்டேன். அந்த லென்ஸ்களின் வளைவுகளைக் கொண்டு, அவை எத்தனை அகலமுள்ள வட்டத்தின் பாகமாக இருக்கும் என்று கணக்குப் பார்த்தேன். ஒன்று ஆறு அங்குலக் குறுக்களவு உள்ள வட்டக் கண்ணாடி என்றும், இன்னும் இரண்டு எட்டு அங்குலக் குறுக்களவு உள்ள வட்டக் கண்ணாடிகள் என்றும் தெரிய வந்தன.

"ஆறு அங்குல வட்டத்தைச் சேர்ந்த கண்ணாடித் துண்டுகளில் சிறிது கரி காணப்பட்டதால் அது மேலே யுள்ள எண்ணெய் விளக்கைச் சேர்ந்தது என்றும், எட்டு அங்குல வட்டத்தைச் சேர்ந்த கண்ணாடி கீழேயுள்ள காஸ் விளக்கைச் சேர்ந்தது என்றும் புலனாயிற்று.

"அதே மாதிரி அந்த மூன்று அங்குல ரப்பர் துண்டின் வளைவைக் கொண்டு அது நாலு அங்குலக் குறுக்களவு உள்ள ரப்பர் சக்கரத்திலிருந்து துண்டிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிய வந்தது.

"பிறகு கண்ணாடித் துண்டுகளைப் பல வகைகளில் சேர்த்து வைத்துப் பார்த்ததில் அவற்றில் சில எண்கள் தென்பட்டன. அந்த எண்கள் அவை எந்த வருடம் தனி உரிமைப் பத்திரம் பெற்றன என்பதைக் குறிப்பதாகத்தான் இருக்கும் என்று தீர்மானித்து நியூயார்க் பொதுஜன வாசகசாலைக்குச் சென்று அங்கு உள்ள சில புத்தகங்களைப் புரட்டிப் பார்த்தேன். பிட்ஸ்பர்க்கில் உள்ள மாக்பெத் என்னும் கம்பெனிதான் இந்த லென்ஸ்களைத் தயாரித்து 'பேடன்ட்' செய்தது என்று தெரிந்து கொண்டேன்.

"உடனே அந்தக் கம்பெனிக்குக் கடிதம் எழுதி லென்ஸைப் பற்றி விசாரித்தேன். அவர்கள் அது ஒரு பழைய கால முறை லென்ஸ் என்றும், 1912லிருந்து அதன் தயாரிப்பை நிறுத்திவிட்டதாகவும் சொன்னார்கள்.

"பிறகு குடைசாய்ந்த வண்டியைப் பூதக் கண்ணாடி கொண்டு பரிசோதனை செய்து பார்த்ததில் அதன் ஒரு பாகத்தில் சாம்பல் நிற வர்ணப் பூச்சு ஒட்டிக் கொண்டிருந்ததைக் கவனித்தேன்.

"ஆகவே அந்த விவரங்களைக் கொண்டு அது 1909 பேகார்ட், மாடல் 18 என்றும் சாம்பல் வர்ணமுடையது என்றும் தீர்மானித்தேன். அதோடு பெட்ரோல் நிறைய வழியில் சிந்திக் கிடந்ததால் கார் கட்டாயம் ஏதாவது பட்டறையில்தான் இருக்க வேண்டும் என்றும் தீர்மானித்தேன்.

"ஆகவே இத்தகைய காரைத் தேடும்படி எல்லாப் போலீஸ் அதிகாரிகளுக்கும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. பல கார்களைப் போய்ப் பார்வையிட்டேன். ஆனால் எதுவும் விபத்தில் அகப்பட்டுக் கொண்ட கார் என்று தோன்றவில்லை.

"கடைசியில் ஒரு பட்டறையில் நான் சந்தேகப்பட்ட கார் வைக்கப்பட்டிருந்தது என்று தகவல் கிடைத்தது. ஆனால் அங்கு போய்ப் பார்த்தால் அந்தக் காரைக் காணவில்லை. பட்டறையின் சொந்தக்காரரை விசாரித்ததில் அந்தக் கார் பட்டறையை விட்டுப் போய் இரண்டு நாட்கள் ஆகிறதென்றும் அதன் சொந்தக்காரர் ஜாவி காஸெல்லா என்பவர் என்றும், அவர் நியூயார்க்கின் கிழக்குப் பகுதியில் உள்ள எழுபத்தைந்தாவது தெருவில் நூற்றிப் பதின்மூன்றாவது இலக்கமுள்ள வீட்டில் வசிக்கிறார் என்றும் சொன்னார்.

"ஆனால் அங்கு போய்ப் பார்த்ததில் யாரையும் காணவில்லை. வீடு பூட்டிக் கிடந்தது. என்ன செய்வது என்று தெரி

யாமல் நான் தவித்துக் கொண்டிருக்கையில் தபால்காரர் சில கடிதங்களை எடுத்துக் கொண்டு அந்தப் பக்கம் வந்தார். அந்தக் கடிதங்களை வாங்கி மேலேயுள்ள முத்திரையைப் பார்த்ததில் அவை நியூயார்க்குக்குத் தெற்கே ஐம்பது மைலில் உள்ள ஆவன் ஹர்ஸ்ட் என்னும் ஊரிலிருந்து வந்தது என்று தெரிய வந்தது.

''உடனே நான் ஆவன் ஹர்ஸ்ட்டுக்குச் சென்று அங்குள்ள பட்டறைகளை யெல்லாம் தேடிப் பார்த்தேன். ஒரு பட்டறையில் நான் எதிர்பார்த்த கார் இருந்தது. ஆனால் காரின் சொந்தக்காரர் விபத்து நடந்த அன்று தாம் நியூயார்க்கிலேயே 'இல்லையென்று சாதித்தார். அவரைக் கைது செய்ய என்னிடம் போதுமான சாட்சியங்கள் இல்லாமல் இருந்ததால், அவருக்குத் தெரியாமல், அவர் கார் டயரின் ஒரு சிறு துண்டைப் பேனாக் கத்தியால் வெட்டி எடுத்துக் கொண்டேன்.

''உடனே போலீஸ் பரிசோதகரிடம் கொடுத்து, அந்தத் துண்டையும், பழைய மூன்று அங்குல நீளத் துண்டையும் இரண்டும் ஒன்றுதானா என்று பரிசோதிக்கச் சொன்னேன். இரண்டும் ஒரே டயரைச் சேர்ந்தவைதாம் என்று பரிசோதகர் சொன்னார்'' என்று பிரன்னர் சொல்லி முடித்தார்!

XXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXX




## இந்திய தேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

ஐரோப்பிய நாடுகளில் பதினெட்டாம் நூற்றாண்டில் கலாசார தேசியம் அடித்தளமாக அமைந்து பத்தொன்பதாம் நூற்றாண்டில் அரசியல் தேசியம் உறுதியுடன் எழுந்த வரலாற்றினைத் துவக்கத்தில் சுருங்கக் கூறி, 18, 19, 20-ம் நூற்றாண்டுகளில் பாரதத்தில் தேசியம் படிப்படியாக வளர்ந்த நிகழ்ச்சிகளை விரிவாக இந்நூலின்கண் ஆராய்ந்துள்ளார் ஆசிரியர் பி. எஸ். மணி. பிரிட்டிஷாரின் ஆட்சியின் கீழ் இந்தியாவில் தேசியம் வளர்ந்த வரலாற்றுப் பகுதிகளில் பாரதத்தின் வரலாற்றினையே காண்கிறோம். பிரம்ம சமாஜம், ராமகிருஷ்ணர் இயக்கம், விவேகானந்தரின் ஆன்மிகப் பணி, சகோதரி நிவேதிதாவின் தொண்டு, பிரம்மஞான சபை, ஆரிய சமாஜம், வள்ளலாரின் சமரச சன்மார்க்க சங்கம் இவை தேசியம் வளர எவ்வாறு துணை புரிந்தன என்பதனைத் தக்க சான்றுகளுடன் விளக்கியுள்ளார். இந்திய தேசிய காங்கிரஸ் உருப்பெற்று காந்தியும் தோன்றிய பின்னர் இந்திய தேசியம் ஆக்கம் பெற்ற வரலாற்றினை 'மிதவாதிகளின் தேசியம்', 'தீவிர வாதிகளின் தேசியம்' 'பயங்கர வாத இயக்கமும், தேசியமும்' 'ஹோம்ரூல் இயக்க எதிரொலி' ஆகிய அத்தியாயங்களில் விருப்பு வெறுப்பின்றி நடுநின்று ஆராய்ந்துள்ளமைக்காக ஆசிரியரைப் பாராட்டலாம். காந்திஜி, ராஜாஜி, நேரு, பாரதியார், திலகர் வ. உ. சி. போன்ற அறிஞர் பெருமக்களின் பேச்சுக்களிலிருந்தும், எழுத்துக்களிலிருந்தும் தேசிய வளர்ச்சிக்கான சான்றுகளை எடுத்துரைத்துள்ளதுடன் மேலைநாட்டு அறிஞர்களின் கருத்துக்களையும் கையாண்டுள்ளார். சுவாமி தயானந்தரின் (ஆரிய சமாஜ ஸ்தாபகர்) சேவை குறித்து ராஜாஜி, 'நவீன காலத்துக்குப் பொருந்தாத வகையில் இந்து மதம் பின்தள்ளப்பட்டிருக்கிறது என்ற கருத்தை எதிர்த்து சுவாமி தயானந்தரின் உள்ளம் புரட்சி செய்தது. தொன்மை வாய்ந்த காட்டை, தழை, தாட்சண்யமின்றி வெட்டித் திருத்தி நவீன வாழ்க்கைக்கு ஏற்ற குடியிருப்பாக மாற்றி யமைத்தார்' என்று குறிப்பிட்டுள்ளதைப் பொருத்தமான இடத்தில் அளித்துள்ளார்.

494 பக்கங்கள் கொண்ட இந்நூலில் 'சுதந்திர இந்தியாவில் தேசியம்' என்ற பகுதிக்கு இரண்டே கால் பக்கங்களை மட்டுமே ஆசிரியர் ஒதுக்கியுள்ளார். அதற்கு அதிகமாக எழுத ஏதுமில்லை என்று ஆசிரியர் எண்ணி யிருப்பாரேயானால் அவரைக் குறை சொல்ல முடியாது. தொழில்களைத் தேசியமயமாக்குவதில் தீவிரம் காட்டும் தலைவர்கள் பலர் இருந்தாலும் மக்களிடையே தேசிய உணர்வைப் பெருக்கும் செல்வாக்கும் சிலரும் மிக்க தலைவர்கள் சுதந்திர இந்தியாவில் படிப்படியாகக் குறைந்து போவது நமது துரதிர்ஷ்டம்தான்.

பாரதத்துக்கு விஜயம் செய்து திரும்பிச் சென்ற மேலைநாட்டவர் ஒருவர், 'இந்தியாவில் மராத்தியர்களையும், தமிழர்களையும், வங்காளிகளையும், மலையாளிகளையும், ஆந்திரர்களையும் பார்த்தேன். ஆயின், இந்தியர் ஒருவரைக் கூடப் பார்க்கவில்லையே!' என்று வேதனையுடன் கூறியது இங்கு நம் நினைவுக்கு வருகிறது.

தேசியம் பற்றிய இந்நூலிலே அச்சுப் பிழைகள் செய்வது நமது தேசியப் பண்போ என்று சந்தேகிக்கத் தக்க அளவில் அவை பக்கத்துக்குப் பக்கம் விரவிக் கிடக்கின்றன! அதை ஒதுக்கிவிட்டால் இதனை அரிய பெரிய முயற்சி என வரவேற்கலாம்.

வெளியிட்டோர்: பூங்கோதை பதிப்பகம். சென்னை—4. விலை: ரு. 15.00. —ரா. பா.



நினைவில் நிற்கும் நேரங்கள்

# பின்னி அறிந்திடும், நீங்கள் எப்படித் தோற்றமளிக்க விரும்புவீர் என்பதை



Interpub/BB/48/74 tam

பின்னி வழங்கும் டெரீன் கலந்த,
அணியத் தூண்டும் துணிவகைகள்
நீங்கள் விரும்பும் தோற்றம் தந்திட
துணை புரிகின்றன. குறிப்பாக, நினைவில்
நிற்கும் நிகழ்ச்சிகளில்.

**நாங்கள் பெருமளவில் மாறிவிட்டோம்—
உங்களைப் போலவே!**

# பின்னி

TERENE ® இழைந்தது

® இது கா:பியின் பதிவுபெற்ற ட்ரேட்மார்க்



# இண்டேன் எரிவாயு உபயோகிப்பவர்கள் கவனிக்கவும்!



**Indane**

எமது வினியோகத்திட்டம் இன்னும் விஸ்தரிக்கப்படாத பட்டினங்களிலும், நகர்ப்புறப் பகுதிகளிலும் உள்ள சில குடும்பத்தினர்கள், சமையல் உபயோகத்திற்காக இண்டியன் ஆயில் வழங்கும் இண்டேன் எரிவாயுவை, எங்கள் வினியோகத் திட்டத்துக்குப் புறம்பாக, எங்கள் அனுமதி பெறாமல் உபயோகப்படுத்தி வருவதாகப் பல சம்பவங்கள் எமது கவனத்திற்குக் கொண்டுவரப் பட்டுள்ளன. வினியோகத் திட்டப் பகுதிகளிலிருந்து பிற பகுதிகளுக்கு சிலிண்டர்கள் தனியார்களால் எடுத்துச் செல்லப் படுவதாகத் தெரிகிறது.

அதிகாரம் பெறாத நபர்களால் காஸ் சிலிண்டர்களை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்துக்கு எடுத்துச் செல்லுவது சட்டவிரோதமாகும். மேலும் எந்த விதிகளின் அடிப்படையில் குடும்பத்தினர்களுக்கு, இந்த எரிவாயு உபயோகிக்க, உபகரணங்கள் இணைக்கப்படுகின்றனவோ, அந்த விதிகளையும் இது மீறுவதாகும். ''சர்வீஸ் செய்யும் எந்த வினியோகஸ்தர் மூலமாக முதலில் இண்டேன் வாயு உபகரணங்களை ஒருவர் வாங்கினாரோ, அவருடைய வினியோக எல்லையைத் தாண்டி அந்த உபகரணங்களை உபயோகிக்கும் குடும்பத்தினர் எடுத்துச் செல்லக்கூடாது என்பது எமது வினியோக ஷரத்துக்களில் முக்கிய நிபந்தனையாகும்.''

அதிகாரம்பெறாத நபர்களால், மோட்டார்கள், ஜீப்புகள், மற்றும் இதர வாகனங்கள் மூலம் காஸ் சிலிண்டர்கள் எடுத்துச் செல்லப் படுவது எமது கவனத்திற்கு கொண்டுவரப்பட்டுள்ளன. அனுபவமில்லாத நபர்கள், காஸ் சிலிண்டர்களை இணைப்பு செய்வதாலும், கழற்றுவதாலும் அபாயகரமான விபத்துக்கள் ஏற்பட்டுள்ளன. பல உயிர்ச் சேதங்கள் ஏற்பட்டுள்ளன. அருகிலுள்ள பலருக்குக்கூட பலத்த காயங்கள் உண்டாகி இருக்கின்றன.

இண்டேன் வினியோகத் திட்டம் இன்னும் செயல்படாத பகுதிகளில் இண்டேன் சிலிண்டர்களை உபயோகிப்பதனால் ஏற்படும் ஆபத்துக்களைக் குறித்துப் பொதுமக்கள் எச்சரிக்கப்படுகின்றனர். அவர்கள் தங்களுடைய சொந்த நலனைக் கருதி வெளியார்கள் மூலம் பெற்றுள்ள சிலிண்டர்களை, அதிகாரபூர்வமான வினியோகஸ்தர்களிடம் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்.




**இந்தியன் ஆயில் கார்ப்பொரேஷன் லிமிடெட்**

# பன்றிமலைப் பெருந்தகைக்கு நன்றியஞ்சலி

பன்றிமலை சுவாமிகள் என்று சொன்ன மாத்திரத்திலேயே அனைவரும் அற்புதச் செயல்களைத்தான் நினைவு கூருவர். இந்த அற்புதச் செயல்கள்தாம் அவர்பால் ஆயிர மாயிரம் மக்களைத் திரட்டி வைக்கின்றன. புலன்களாலும், ஸயன்ஸினாலும் விளங்கிக் கொள்ள முடியாத பல வித்தைகளை ஸ்ரீ சுவாமிகள் மிகவும் அநாயாசமாகப் புரிவதைக் கண்டு மக்கள் பிரமிக்கிறார்கள். அவர் அருளால் தங்களது உடற்பிணி, உளப் பிணி ஆகியன நீரப்பெற்றோரும் எண்ணி லடங்காதவர் ஆவர்.

'பிரமிப்பு ஞானமாகுமா? உலகியல் துன்பங்களிலிருந்து நிவாரணம் பெறுவது ஞானமாமோ?' என்ற கேள்வி எழுத்தான் செய்கிறது. ஆனால் பிரமிப்புக்கும், துன்ப நிவாரணத்துக்கும் காரணமான சக்தி — அல்லது வித்தியே, நம் சக்திகளுக்கு அப்பாற்பட்ட ஒரு மகாசக்தியிடம் மாந்தர் நம்பிக்கை வைப்பதற்கு அழுத்தந் திருத்தமாக உதவி புரிகிறது. ஸ்ரீ சுவாமிகளிடம் செல்கிறவர்கள் பிரமிப்பதோடு நிற்கவில்லை; பிரமிப்புக்கு மேம்பட்ட பிரேமைக்கு உரியதும், உலகியலுக்கு அப்பாற்பட்டதுமான மூல சக்தியிடம் அவர்களின் பக்தி உறுதி பெறுகிறது. இதுவே ஸ்ரீ சுவாமிகள் புரிந்து வரும் மகத்தான சமுதாயத் திருப்பணி. அவரது அற்புதங்களால் எத்தனை நாத்திகர்கள் ஆத்திகர்க



ளாகியுள்ளனர்? எத்தனை ஆத்திகர்களின் அரை குறை பக்தி நிறைவு பெற்றிருக்கிறது?

அற்புத சித்திகளையே ஆத்ம சாதனையின் முடிந்த முடிவாக நினைத்து விடக் கூடாது தான். ஆனால் சுவாமிகளைப் போல சித்திகளை மக்கட் குல நலனுக்கு மட்டுமே பயன்படுத்துகையில் அவற்றைப் பழிக்கவும் கூடாதுதான்.

ஸ்ரீ பரமஹம்ச ராமகிருஷ்ணர் போன்ற மகாபுருஷர்கள் சித்திகளை நிந்தித்தது மெய்தான். ஆனால் சாதகன் ஒருவன் அற்புதங்களினால் கவரப்பட்டு ஆத்மானந்தத்தை அநுபவிக்காமல் சில அதீத சக்திகளைப் பெறுவதோடு நின்றுவிடப் போகிறானே என்ற கருணைச் சிந்தனையால், சாமானிய சாதகனை உத்தேசித்தே இவ்விதம் அவர்கள் எச்சரிக்கை செய்தனர். சபலங்களுக்கு ஆளாகிச் சுயநலனையே அதீத சக்திகளால் பேணிக் கொள்ளும் சாமானிய நிலைக்கு மேம்பட்டு, இறையருளைப் பாய்ச்சும் வடிகாலாகத் தங்களை ஆக்கிக் கொள்ளக் கூடிய பிறர்க்குரியாளரிடம் இந்த சித்திகளே உலகுக்கு உபகாரமாகின்றன. நமக்குத் தெரிந்த பௌதிக விதிகளுக்கு அப்பாற்பட்டவை என்பதாலேயே அற்புதங்களை இயற்கைக்கு விரோதமானவை என்று ஒதுக்குவது முறையல்ல. அனவரதமும் பிரம்ம சாட்சாத்காரத்திலேயே திளைத்த — ஞான ஸ்வரூபமான—ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், இயேசு கிறிஸ்துவும், ஸாயி பாபாவும், ஸதாசிவ பிரம்மேந்திரர்களும் எத்தனை எத்தனை அற்புதங்களைச் செய்யவில்லை! அவர்களின் கருணைச் சமாதி நிலையில் அற்புதமே அவர்களுக்கு இயற்கையாக இருக்கிறது. நமக்குத்தான் அது இயற்கைக்கு அதீதம்! சித்திகள் என்று பயிலாமலே, அனைத்துமான ஒரே உயிருடன் தங்களை இரண்டற உணர்ந்திருக்கும் ஆத்ம ஞானத்திலேயே இவர்களுக்கு அத்தகைய சக்தி ஏற்படுகிறது.

ஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் தாம் முருகனின் திருவருளால் இச்சக்திகளைப் பெற்றிருப்பதாகவும், அந்த அருட் திவலை இன்றேல், தாமும் ஏனைய பாமரர்களில் ஒருவர்தான் என்றும் விநயத்துடன் கூறுகிறார். "நான் கடவுள் அல்ல; நான் கடவுளின் அடிமை, உங்கள் சேவகன்" என்று தெய்வ பக்தியும் மக்களன்பும் மணக்கக் கூறுகிறார். "அவன் அருளைப் பெற்றால் நீங்களும் சர்வ சக்தி பெற முடியும்" என்று அடித்துக் கூறுகிறார். இச்சக்திகளுக்கெல்லாம் மேம்பட்டது ஆத்ம சாந்தியே என்பதையும் தவறாமல் எடுத்தியம்புகிறார். அடியாருக்குத் தனிப்படத் தரும் உபதேசங்களாலும் பொது உபந்நியாசங்களாலும், கட்டுரைகளாலும் ஆத்ம சாந்திக்கு வழிகோலும் பக்தி — ஞானத் திருத் தொண்டினைப் புரிகிறார்.

இந்த உலகம் உள்ளளவும் அதிலுள்ள பெரும்பாலான மக்கள் ஒன்று போனால் இன்னொன்று எனப் பிரச்னைகளுக்குப் பரிகாரத்தைத்தான் தேடிக் கொண்டு இருப்பார்களே ஒழிய, ஆத்ம சாந்தியில் முழுக முற்பட மாட்டார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு இந்தப் பிரச்னைகளுக்குப் பரிகாரம் தேடித் தரும்போதே பரம்பொருளின் அருளைக் குழைத்துத் தருவதுதான் ஆத்மிக வாழ்வின் முதற் படியாக இருக்கிறது. இப்படிப் படி ஏற்றி வைக்கும் பணியைச் செய்கிற பெரியோர் அனைவரையும் பணிந்து நன்றிகூற நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அவ்விதத்தில் ஏராளமான மக்களின் குறைகளைத் தீர்த்து வைத்து, அவர்களுக்குப் பக்தி ஊட்டி வரும் ஸ்ரீ பன்றிமலை சுவாமிகளுக்கு நம் நன்றியஞ்சலிகளை அளிக்கிறோம். கண்ணீர் வழிந்த எத்தனை எத்தனையோ முகங்களில் இறைவனின் குளிர்ந்த நினைப்பைப் பரப்பி வரும் இந்தப் பெருந்தகையாளரின் ஜன்ம தினத்தைச் சென்னையில் அன்பர்கள், பக்தர்கள் கொண்டாடவிருக்கிறார்கள். ஏப்ரல் 22, 23 தேதிகளில் விழா நடக்கிறது. இத்தருணத்தில் இவரது அற்புதச் செயல்களும், அதற்கு வேரான அன்புச் சிந்தனையும் இன்னும் பலப் பல ஆண்டுகள் உலகுக்குக் கிட்ட வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.



# விண்ணும் மண்ணும்




## 26. அமெரிக்க ராமன்!

நியூயார்க்கில் மைக்கேல் டேவிஸ் வசித்து வந்தது. மாதிரிக்கு ஒன்றாகச் சிறிய அளவில் படுக்கை அறை, வரவேற்பு அறை, சமையலறை இவைகளை உடைய 'பாச்சிலர் ஃப்ளாட்.' வயதாகி விட்ட காரணத்தால் நகரின் சந்தடியைநரகமாகக்கருதத்தொடங்கி விட்ட அவனுடைய தாயார், அதன் சுற்றுப்புறக் குடியிருப்புக்களுள் ஒன்றில் தனியே அடக்கமான வீட்டில் அளவான அழகிய தோட்டத்தைக் கவனித்துக் கொண்டு வாழ்ந்து வரலானாள். மகனுடன் சேர்ந்து வசிப்பது அவனுக்குத் தொந்தரவாக இருக்கலாம் என்ற எண்ணமும் அவளுக்கு இல்லாது போகவில்லை. தன் கணவர் விட்டுச் சென்ற செல்வத்தைக் கொண்டு தனித்துத் தன்னிச்சையாக வாழக்கூடிய வசதியும் அவளுக்கு இருந்தது. சராசரி அமெரிக்கர்களைப் போன்றே தாயும் மகனும் பிரிந்து வாழ்ந்தார்கள். வாரத்துக்கு ஒரு முறை மகன் தாயாரைப் போய்ப் பார்த்து வருவான். அவள் தேவைகளைக் கவனிக்க முற்படுவான். ஆனால் அதிகமாக அவனுக்குத் தொந்தரவு தருவதில்லை அவள். தாயாருக்கு உதவினோம் என்ற மனத் திருப்தி அவனுக்குச் சிறிது ஏற்படுமளவுக்கு மட்டும் ஓரிரு காரியங்களைச் சொல்வாள்.

மைக்கேலின் 'பிரும்மச்சாரிக் குடியிருப்பு'க்கு அனுபமா அடிக்கடி விஜயம் செய்திருக்கிறாள். மாலை நேரங்களில், அவர்கள் கிளப்புக்கு, சினிமாவுக்கு, நாடகத்துக்கு என்று எங்கேயாவது போய்த் திரும்பும்போது சில சமயம் உணவு விடுதியில் சாப்பிட்டு விடுவார்கள். வேறு சில தருணங்களில் அனுபமா மைக்கேலின் குடியிருப்புக்கு வந்து சமைப்பாள். மைக்கேல் உதவுவான். மைக்கேல் சமைத்து அவள் உதவுகிற நாட்களும் உண்டு.

உணவு அருந்தியபிறகு சிறிது நேரம் உல்லாசமாய்ப் பேசிக் கொண்டிருந்து விட்டு அனுபமா வீடு திரும்புவாள். மைக்கேலின் இல்லம் துப்புரவாக இருக்கும். ஒரு தூசி, துரும்பு காணப்படாதது மட்டுமல்ல, ஒரு புத்தகம் இறைந்து கிடந்தோ அல்லது ஒரு பாத்திரம் கழுவிக் கவிழ்க்கப்படாமல் இருந்தோ அனுபமா பார்த்ததில்லை. இந்தக் கச்சிதத்தை, தூய்மையை அவன் அவளுடன் பழகுகிற விதத்திலும்

கி.ராஜேந்திரன்

காட்டி வந்தான்! அவளைத் தான் இதய பூர்வமாகக் காதலிப்பதை அவன் மறைத்ததேயில்லை. அவள் கரங்களைப் பற்றிக் கொண்டு அவள் அழகை அவன் புகழ்ந்தது உண்டு. அவளுக்குப் பரிசு கொடுத்து முத்தமிட்டதுண்டு. அவள் அறிவை மெச்சி முதுகில் தட்டிக் கொடுத்ததுண்டு. அவளைப் பரிகசித்துச் சிரித்துவிட்டுச் சமாதானமாகக் கன்னத்தைக் கிள்ளியதுமுண்டு. என்றாலும் அவன் வரம்பு மீறியதில்லை. அவள் தன்னிடம் தோழமைக்கு அதிகமாக எதையும் எதிர்பார்க்கவில்லை என்பதை மறவாமல் சதா எச்சரிக்கையுடன் இருந்து வந்தான். தன் காதலை அவள் ஏற்று இதயத்திலும் இடம் தரும் வரையில் தன் ஆசைகளுக்குத் தடை போடத் தயாராயிருந்தான். இன்றைய சராசரி அமெரிக்க யுவர்களுக்கும் யுவதிகளுக்கும் முற்றிலும் மாறுபட்ட அவனது இந்தப் போக்கு பற்றிப் பல சமயங்களில் அனுபமா அதிசயத்துடன் எண்ணிப் பார்த்ததுண்டு. உடலால் ஒன்றுவதற்கும் மனத்தால் ஒன்றுவதற்கும் சம்பந்தமில்லை என்றும் பின்னதற்காக முன்னது காத்திருக்க வேண்டியதில்லை என்றும் அறிவு பூர்வமாகச் சிந்தித்து முடிவுகட்டிவிட்ட இளம் தலைமுறைதான் அமெரிக்காவில் — அங்கு மட்டுமென்ன மேனாடுகள் பலவற்றில்— இன்று நிலவுகிறது. இரு மனங்கள் ஒன்றுபடுவது என்பது சுலபத்தில் நிகழக் கூடியது அல்ல; அதன் பின்னரும் திருமணம் நிகழ்வது, ஒன்றாய்க் குடித்தனம் நடத்துவது, பிள்ளைப் பேறுக்குத் தயாராவது என்று பல கட்டங்களைக் கடந்தாக வேண்டும் எனில் இவற்றில் பொருளாதாரச் சிக்கல்களும், வேலை வாய்ப்பு, படிப்பு, குடியிருப்பு போன்ற இதர பல சங்கடங்களும் உண்டு. இவற்றையெல்லாம் வெற்றி காணும் வரை காத்திராமல் இயற்கை வேகங்களை அவ்வப்போது தணித்துக் கொள்வதில் தவறில்லை என்பது இவர்கள் வாதம்.

இவ்வாறான ஒரு சூழலில் மைக்கேலைப் போன்று ஓர் அமெரிக்கன், நூற்றுக்கு நூறு சதவிகிதம் கனவானாக நடந்து கொள்வதைப் பார்க்கும்போது அனுபமாவுக்குப் பெருமையாக இருக்கும். ஆனால் அதே சமயம் ஒரு சந்தேகமும் எழும். தான் இந்தியப் பெண்ணாக இல்லாமல் ஓர் அமெரிக்க அணங்காக இருந்தால் இதே அளவுக்கு இவர் கண்ணியமாக நடந்துகொள்வாரா என்பதுதான் அந்தச் சந்தேகம். அமெரிக்காவிலேயே சிறு வயது முதல் வளர்ந்து வந்திருந்தாலும் அனுபமாவின் மனம் இந்தியப் பண்புகள் பலவற்றின் உறைவிடமாகத் திகழும்; அந்த உள்ளம் அதிர்ச்சி அடையும் விதமாகத் தான் தவறிப் போய்க் கூட நடந்து கொண்டு விடக் கூடாது என்று மைக்கேல் எண்ணுகிறாரோ என்று இவள் யோசிப்பாள். வேறு பெண்களுடன் அவர் மிக மிக ஜாக்கிரதையாக அந்நியோன்யமான அளவுக்கு மட்டுமே பழகுவதற்கும் இதே காரணமாக இருக்கலாமோ என்றும் சிந்திப்பாள். 'இருந்தாலும் இப்படி ஓர் அமெரிக்க ராமராக இவர்' நடந்து கொள்ள வேண்



டாம்; சிறிது போக்கிரித்தனத்தைக் காட்டினால்கூடத் தேவலாம்!' என்று அவளே நினைக்குமளவுக்கு அவன் அவளிடம் மரியாதை தவறாமல் நடந்து கொண்டான்.

இத்தகைய சூழலில்தான் அனுபமா தனஞ்செயனைச் சந்தித்து அவனுடன் சில தினங்களை நியூயார்க் நகரைச் சுற்றிப் பார்ப்பதில் கழிக்க நேர்ந்தது. மைக்கேலும் வழக்கமான பெருந்தன்மையுடன் சட்டென்று ஒதுங்கிக் கொண்டு விட்டான். ஓர் இந்திய நண்பனுக்கு அனுபமா நியூயார்க்கின் அதிசயங்களைச் சுற்றிக் காட்ட விரும்பினால் அவளைச் சந்தேகக் கண்கொண்டு தான் பார்ப்பது போலிருக்கக் கூடாது; அவளை இழந்து விடுவோமோ எனப் பயந்து அவர்களுடன் தானும் எல்லா இடங்களுக்கும் சென்று வருவது போல் தோன்றக் கூடாது என்ற நோக்கில் அவன் ஒதுங்கிக்கொண்டு அதற்காக, 'என் தாயாரைப் பல் டாக்டரிடம் அழைத்துப் போக வேண்டியிருக்கிறது' என்று ஒரு சமயம் புளுகவும் செய்தான். அவ்விதம் பொய் கூறிப் பிரிந்த சில தினங்களுக்குப் பிறகு அவனுடைய குடியிருப்புக்கு எஃப். பி. ஐ. அதிகாரிகள் இருவர் விஜயம் செய்தார்கள்!



# 29. கொடிய குற்றச்சாட்டு

பதினாறு கோடியே அறுபத்தி நாலு லட்சத்து ஐம்பத்தையாயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்தைந்து விரல் அடையாளங்களைச் சேகரித்து வைத்திருக்கிறது ஒரு துப்பறியும் நிறுவனம். அதுதான் அமெரிக்காவில் உள்ள எஃப். பி. ஐ. என்று சுருக்கமாக வழங்குகிற ஃபெடரல் பெரு ஆஃப் இன்வெஸ்ட்டிகேஷன். இது 1963-ம் ஆண்டு கணக்கு. கடந்த பத்து ஆண்டுகளில் இந்த எண்ணிக்கை இருபது கோடியாக உயர்ந்திருக்கும். இவர்கள் அனைவரும் ஏதோ ஒரு விதத்தில் குற்றவாளிகள் என்பதல்ல அர்த்தம். குற்றவாளிகளைக்கண்டுபிடிக்க உதவும் என்பதால் அமெரிக்க மக்கள் தாங்களாகவே வலியச் சென்று எஃப் பி. ஐ. நிறுவனத்தில் தங்கள் விரல் ரேகையையும் பெயர் விலாசம் முதலிய விவரங்களையும் பதிவு செய்து வைத்துவிட்டு வருகிறார்கள்!

எஃப். பி. ஐ. என்ற அமைப்பு எத்துணை பெரிது, அதன் அலுவல்கள் எத்தனை கடினமானவை என்பதை உணர இந்த ஒரு புள்ளி விவரமே போதும்.

நீதித் துறையின் கீழ் இயங்குகிற இந்த அமைப்பு, பல்வேறு ராஜ்யங்களிலுள்ள போலீஸ் இலாக்காக்களைத் தவிர மத்திய நிறுவனமாக விளங்குகிறது. வாஷிங்டனில் தலைமையகம் செயல்பட்டாலும் அமெரிக்க நாட்டில் மொத்தம் ஐம்பத்தைந்து பெரிய நகரங்களில் இதன் கிளைகள் உள்ளன.

கள்ள நோட்டுக்கள் அச்சடிப்பது, வரிகளைக் கட்டாமல் மோசடி செய்வது, தபால் — சுங்க இலாக்காக்களை ஏமாற்றுவது போன்ற காரியங்களில் ஈடுபடுகிறவர்களை வளைத்துப் பிடிக்கும் எஃப். பி. ஐ. இது தவிர, குழந்தையைக் கடத்திக் கொண்டு போய்விட்டு அதனை விடுவிக்கப் பணம் கேட்கும் அரக்கர்கள், விபசாரத்தில் பெண்களை ஈடுபடச் செய்து பணம் சம்பாதிக்கும் அற்பர்கள் போன்றவர்களைக் கண்டுபிடித்துத் தண்டனை பெற்றுத் தரும். ஒரு ராஜ்யத்தில் திருடிவிட்டு வேறு ராஜ்யத்துக்கு ஓடிவிடும் திருடர்களைச் சிறைப் படுத்துவது ராஜ்யப் போலீஸுக்குச் சிரமமாகையால் அவர்கள் எஃப். பி. ஐ உதவியை நாடுவார்கள்.

விஞ்ஞான, பொருளாதார, தொழில் வர்த்தக வளர்ச்சியில் அமெரிக்கப் பிரஜைகள் உலகில் முதன்மை ஸ்தானம் வகிப்பது போலவே அயோக்கியத்தனத்திலும் அமெரிக்கக் குண்டர்களுக்கு உலகில் ஈடு இணை கிடையாது! எனவே இவர்களைச் சமாளிக்க வேண்டியிருக்கும் எஃப். பி. ஐ. ஏஜண்ட் எனப்படும் துப்பறியும் வீரர் சரீர பலம் கொண்டவராகவும் இருக்க வேண்டும்; அறிவு பூர்வமாக இயங்கும் சாமர்த்தியம் மிக்கவராகவும் இருக்க வேண்டும். இதை உணர்ந்துதான் வழக்கறிஞராகப் பட்டம் பெற்றவர்களை இந்த வேலைக்குத் தேர்ந்தெடுக்கிறார்கள். அல்லது கணக்காயர் துறையில் பட்டம் பெற்று அனுபவமும் உள்ளவரா யிருக்க வேண்டும். இவ்வாறு தேர்ந்தெடுக்கப் பட்டவர்களுக்குப் பதினாறு வாரங்கள் துப்பறியும் துறையில் பயிற்சி தரப்படுகிறது. சாட்சியங்களைக் கண்டுபிடிப்பது, குற்றவாளிகளை வளைத்துப் பிடிப்பது, பல ரகத் துப்பாக்கிகளைப் பயன்படுத்துவது போன்ற பல விஷயங்களைக் கற்கிறார்கள்.

இத்தகைய ஏஜெண்டுகளில் இருவர் தாம் நியூயார்க்கில் மைக்கேல் டேவிஸ்ஸின் குடியிருப்புக்கு ஒருநாள் வந்து சேர்ந்தார்கள். மைக்கேல் கதவைத் திறந்ததும் மிகவும் மரியாதையுடன் முகமன் கூறித் தங்கள் அடையாளச் சீட்டைக் காண்பித்து விட்டு உள்ளே நுழைந்தார்கள். ''உன்னுடன் சிறிது பேசவேண்டும்; இப்போது உனக்கு ஓய்வான நேரம் எனத் தெரிந்துகொண்டுதான் வந்திருக்கிறோம். எனவே மறுக்க மாட்டாய் என நம்புகிறோம்'' என்றான் அவர்களில் ஒருவன்.

''எனக்குஓர் ஆட்சேபணையும் இல்லை'' என்றான் மைக்கேல், அவர்களை அமரச் செய்துவிட்டு. ''ஆனால் எஃப். பி. ஐ. என்னை விசாரிக்கும்படியாக நான் தப்பு என்ன செய்தேன் என்றுதான் புரியவில்லை!''

''சிலர்தெரிந்து தவறு செய்வார்கள். வேறு சிலர் தங்களை அறியாமலேயே குற்றமிழைப்பார்கள். இன்னும் சிலர் பிறரால் ஏமாற்றப்பட்டு அது காரணமாகப் பெருந் தவறு இழைத்து விடுவார்கள்!''

''நான் எந்த ரகத்தைச் சேர்ந்தவன்?'' என்று சிரித்தபடியே கேட்டுவிட்டுச் சுவரோடு ஒட்டினாற் போலிருந்த ஓர் அலமாரியைத் திறந்தான் மைக்கேல். அலமாரியின் கதவே முன்னால் மடிந்து மேஜையாயிற்று. அலமாரியினுள் தானாகவே ஒரு விளக்கு எரிந்து மது வகைகளுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டியது.

''நாங்கள் காரியார்த்தமாக வந்திருக்கும்போது மது அருந்தக் கூடாது.



ஸ்ரீ கே.வி. வாசுதேவன் (Air Customs, Meenambakkam Airport) அவர்கள் குமாரத்தி சௌபாக்யவதி லீலா என்கிற **கே. வி. லக்ஷ்மி**க்கும், பாலக்காடு ஸ்ரீ என். பி. வெங்கட்டராம அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி ராமு என்கிற **என். வி. ராமகிருஷ்ணனு**க்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு நகரப் பிரமுகர்களும், நண்பர்களும், உறவினர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர். வாழ்க மணமக்கள்



ஸ்ரீ N. சுந்தரேசனின் (Indian Air Force Retd.) குமாரிகள், **மைதிலிக்கும்** மதராஸ் ஸ்ரீ A. V. ஸ்ரீனிவாசய்யர் (D. S. P. Retd.) புதல்வர் சிரஞ்சீவி A. S. **ரவிசந்திரனுக்கும்** (Capt. E. M. E.) மேற்படி அன்னாரின் இளையகுமாரி சௌ. **காயத்ரிக்கும்** ஸ்ரீ E. R. நாராயணனின் (M. M. T. C. Madras) சகோதரன் சிரஞ்சீவி R. **சுப்பிரமணியனுக்கும்** (T.V.S. & Sons (P) Ltd., Trichy) 4-3-74 அன்று ஸ்ரீ ரங்கபவனம் கல்யாண மஹாலில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தன. வாழ்க மணமக்கள்

# புதுமை குன்றா பொலிவுடன் இருங்கள்




சிந்தால் பவுடர் அதிவெப்பமான நாளிலும் உங்களைப் புதுமை குன்றாமல் வைத்திருக்கிறது. அதன் அற்புத நறுமணம் உங்களை விட்டு அகலுவதில்லை.

**கோத்ரெஜ்** அளிக்கும்

## சிந்தால்

Interpub/GSP/12/74 Tam




**மனம் இருந்தது. மார்க்கம் கிடைத்தது!**

இங்கிலாந்தில் உணவுப் பொருள் கடைகளைத் தவிர மற்றக் கடைகளெல்லாம் வாரத்தில் மூன்று நாட்கள் மட்டும்தான் திறந்திருக்க வேண்டும் என்று உத்தர விடப்பட்டது. ஆனால் இது பல கடைக்காரர்களுக்குப் பிடிக்கவில்லை. அவர்களில் ஒருவர் மாதர் சிகை அலங்காரக் கடை வைத்திருப்பவர். அவர் தமது கடையின் ஜன்னல் புறமாக மொச்சைக்கொட்டை டின்களை விற்பனைக்கு அடுக்கி வைத்து, தமது கடையையும் தினமும் திறந்து வைக்கலானார். மொச்சைக் கொட்டை உணவுப் பண்டமல்லவா? ஆனால் மொச் சைக்கொட்டை டின்களின் விலை மட்டும் மிக அதிகமா யிருந்தது. யாரேனும் 'ஒரு மொச்சைக்கொட்டை டின் வாங்கினால், அவர்களுக்கு இலவசமாகச் சிகை அலங் காரம் செய்வதாக அறிவித்திருந்தார். கடை வாசலில் ஏராளமான கூட்டம்! - ஆதாரம்: ''நியூ டைம்ஸ்''

தகவல்: விஜயம்

---

உன் உபசாரத்தை ஏற்பதற்கென்றே இன்னொரு நாள் விஜயம் செய்கிறோம்'' என்று ஒருவன் கூறிக் கொண்டிருக்கையில் மற்றொருவன் அறையின் இண்டு இடுக்குகள், மூலை, முடுக்குகள், எல்லா வற்றையும் ஆராய்ந்தான். ''நாம் பேசுவதைக் கிரகித்து எதிரிகளுக்குத் தெரிவிக்கக் கூடிய ஒலிபரப்புக் கருவி ஏதாவது மறைத்து வைக்கப் பட்டிருக் கிறதா என்று ஆராய்கிறேன்'' என்றான்.

அப்படி ஏதும் இல்லை என்று உறுதி யானதும் மீண்டும் அமர்ந்தான். மைக் கேலுக்கு இதொன்றும் பிடிக்கவில்லை. மௌனமாகத் தனக்கு ஒரு 'காக் டெய்ல்' தயாரித்துக் கொள்வதில் கவ னம் செலுத்தினான்.

அவன் முதுகுக்குப் பின்னாலிருந்து ஒரு குரல் ஒலித்தது: ''மைக்! நீ இந்த நாட்டின் ஒரு கௌரவமான பிரஜை. நாஸாவுக்காகப் பணியாற்றும் ஒரு மதிப்புக்குரிய விஞ்ஞானி. விஷய ஞானமுள்ள உன்னிடம் மற்றச் சாதா ரண மக்களிடம் பேசுவது போல் நாங்கள் உரையாடுவதற்கில்லை. நேரடி யாக விஷயத்துக்கு வருகிறோம். தேசப் பாதுகாப்பில் எஃப். பி. ஐ.க்கு முக்கிய பங்கு உண்டு என்பது உனக்குத் தெரி யும். தேசத் துரோகிகள், ஐந்தாம் படையினர், ஒற்றர்கள் முதலானவருக்கு வலை வீசிச் சிக்க வைப்பது எங்கள் அலுவல்களில் ஒன்று.''

''ரொம்ப சரி, ஆனால் துரதிர்ஷ்ட வசமாக நான் உங்களுக்கு உதவ முடி யாத நிலையில் இருக்கிறேன். இங்கு நான் எந்த ஒற்றனையும் ஒளித்து வைத் துக் கொண்டிருக்கவில்லை'' என்றான் மைக் சிரித்தபடியே.

''நீ அப்படிச் செய்யா விட்டாலும் உனக்கு வேண்டியவர்கள், உன்னால் நேசிக்கப்படுகிறவர்கள் யாராவது அவ் வாறு நடந்து கொள்ளலாமில்லையா?''

மைக்கேலுக்கு அதிர்ச்சியாக இருந் தது. ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? யாரைக் குறிப்பிடுகிறீர்கள்?'' என்றான் திகைப்புடன்.

''அந்தப் பெண் அனுபமா, அவள் அடிக்கடி தனஞ்செயன் என்பவனோடு சேர்ந்து காணப்படுகிறாள். அது பற்றி எங்களுக்குச்சிலசந்தேகங்கள் உள்ளன.''

மைக்கேலுக்கு அவர்களுடைய சிந் தனைப் போக்குப் புரிந்து விட்டது. ''இது என்ன அசட்டுத்தனம்?'' என்று கேட்டுவிட்டுப் பெரிதாகச் சிரித்தான்.

''எங்கள் சந்தேகங்கள்அசட்டுத்தனம் என்பது நிரூபணமாகி விடுமானால் எங் களைவிடச் சந்தோஷப்படக் கூடியவர் வேறு யாருமே இருக்கமுடியாது மைக்!'' என்றான் அவர்களில் ஒருவன். ''ஆனால் அவ்வாறு தீர்மானமாகத் தெரியும் வரையில் நாங்கள் விழிப்புடன் இருந்து உன்னையும் எச்சரிக்கக் கடமைப்பட் டிருக்கிறோம்.''

அவன் கடுமையாகப் பேசியதானது மைக்கேலின் சிரிப்பை அடக்கிப் புன் னகையையும் அழித்து விட்டது.

''அனுபமாவை நீ காதலிக்கிறாய். ஆனால் அதன் எதிரொலியை அவள் மனத்தில் நீ இன்னும் காணவில்லை அல்லவா? இதுவும் எங்களுக்குத் தெரி யும்...!''

''என்னை நம்புங்கள்'' என்றான் மைக் கேல். ''அவள் மனம் இளகும்; என் காதலை ஏற்கும் என்ற உறுதி எனக்கு இருக்கிறது. தனஞ்செயன் இந்திய அரசின் சார்பில் வியாபார நிமித்தம் நியூயார்க் வந்தவன். அவனும் அனுப மாவும் சந்திப்பதில் ஓர் இந்தியப் பெண் இன்னோர் இந்தியனிடம் காட் டும் சர்வ சாதாரணமான நட்புணர் வுக்கும் அக்கறைக்கும் அதிகமாக வேறு ஏதுமில்லை. அனுபமா சிறு வயது முதலே அமெரிக்காவில் வளர்ந்து வந் திருந்தாலும் அவள் அமெரிக்கப் பிரஜை தான் என்றாலும் அவள் உடலில் ஓடு வது இந்திய ரத்தம்தான் என்பதை நோக்குமிடத்தில் அவள் தனஞ்செய னுக்கு நியூயார்க் நகரைச் சுற்றிக் காட்ட முன்வந்தது மிக இயல்பான ஒரு விஷயம். உண்மையில் பார்க்கப் போனால், என்பொருட்டு அவள் சிறி தளவு தயங்கினபோது அதற்காக நான் அவளை இலேசாகக் கடிந்து கொள்ளக்கூடச் செய்தேன். வியாபார விஷயம் வெற்றிகரமாக முடிந்தபிறகு தனஞ்செயன் நியூயார்க்கைச் சுற்றிப் பார்க்க எண்ணியதிலும் அதற்கு டூரிஸ்ட் பஸ்ஸில் ஏறுவதை விட அனு

**நாவலான ஊழல்!**



லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுக்கள் சுமத்தப்பட்டதால் பதவியை ராஜினாமாச் செய்த அமெரிக்க உபஜனாதிபதி அக்னியூ, குற்றச்சாட்டுக்களை எதிர்த்து இப்பொழுது வழக்காடிக்கொண் டிருக்கிறார். இந்த வழக்கில் இது வரையில் இரண்டு லக்ஷம் டாலர்கள் செலவாகியுள்ளன. மேலும் தேவைப்படும் பணத்தைச் சம்பாதித்துக் கொள்ளுவதற்காக அக்னியூ இப்பொழுது நாவல்கள் எழுத ஆரம்பித்திருக்கிறார்! இவரது ஒரு நாவல் வருகிற மே மாதம் முதல் "லேடீஸ் ஹோம் ஜர்னல்" பத்திரிகையில் தொடர்ந்து வெளிவரும். இதற்கு இந்தப் பத்திரிகை அக்னியூவுக்குத் தொண்ணூற்றெட்டாயிரம் டாலர்கள் கொடுக்கிறது!

ஆதாரம்: "நியூ டைம்ஸ்" தகவல்: விஜயம்

---

பமாவை அணுகுவது சிறந்தது என நினைத்ததிலும் அதிசயமுமில்லை, தவறுமில்லை. அவர்களுடைய செயல்களில் இதற்கு அதிகமாக ஏதும் அர்த்தத்தைக் கற்பிக்காதீர்கள்.''

மைக்கேலுடைய பேச்சிலே காணப்பட்ட ஆவேசத்தை அலட்சியம் செய்துவிட்டு எஃப். பி. ஐ. பேர்வழி கூறினான்:

''நாங்கள் வேறு விதமாகத்தான் எண்ணுகிறோம். அனுபமா தனஞ்செயனிடம் இரங்கிப் போயிருக்கிறாள் என்று எங்களுக்குத் தோன்றுகிறது. அவள் தனஞ்செயனின் கைப்பாவையாகியிருக்கிறாள் என்று கருதுகிறோம். தனஞ்செயன் வியாபார நோக்கில் வந்திருப்பதாக நடிக்கிறான்; உண்மையில் அவன் இந்தியப் பாதுகாப்புத் துறையைச் சேர்ந்த ஒற்றன்; டி. எம். ஐ. ஆசாமி என்று நினைக்கிறோம். அனுபமாவைப் பயன்படுத்தி உன்னை மயக்கி இந்தியாவுக்கு உன்னைக் கடத்திக் கொண்டு போக முயலுகிறான் அவன். அனுபமாவின் யோசனையை ஏற்று ஏற்கனவே நீ இந்தியா செல்ல அவனுக்கும் உனக்கும் சேர்த்து டிக்கெட் கூட வாங்கி விட்டாய் அல்லவா?''

மைக்கேலுக்கு ஒரே திகைப்பாயிருந்தது. 'எப்பேர்ப்பட்ட கொடிய, அபாண்டமான பழிகளை, வாய் கூசாமல் சுமத்துகிறான் இவன்!' காக்டெய்லில் ஒரு பெரிய மடக்காக விழுங்கிவிட்டு அவன் தலையை உதறிக் கண்களை மூடி மூடித் திறந்தான், இதெல்லாம் கனவல்ல என்று தனக்குத் தானே நிச்சயப்படுத்திக் கொள்ள விரும்புகிறவன் போல. பிறகு கேட்டான்: ''என்னைக் கடத்திக்கொண்டு போவதா? எதற்கு?''

''அதை இன்னும் யூகிக்கவில்லையா நீ? இந்தியாவுக்கு ராக்கெட் விஞ்ஞானத்தில்—அதனைத் திசை திருப்பிக் கட்டுப்படுத்தும் துறையில் — துரிதமாக முன்னேற வேண்டிய அவசியம் இருக்கிறது. செயற்கைக் கோளை அனுப்பி அளப்பரிய பயன்களைப் பெறலாம் என்பது ஓர் அம்சம். அதில் வெற்றி பெற்றால் ராணுவரீதியில்மிக நவீனமான ராக்கெட்டுகளைப் பயன் படுத்தக் கூடிய ஆற்றலையும் பெற்றதாகி விடும்; நாட்டின் பாதுகாப்பைப் பலப்படுத்தியதாகும் என்பது மற்றொரு நோக்கம்.''

''அதாவது அனுபமா தனஞ்செயனிடம் மோகம் கொண்டு, அவன் விருப்பப்படி என்னிடம் ஆசை கொண்டிருப்பது போல் நடித்து, என்னை இந்தியாவுக்குக் கவர்ந்து இழுத்துக் கொண்டு போகப் போகிறாள் என்கிறீர்கள்! அங்கு போன பிறகும் அவள் சாகஸங்கள் புரிந்து என்னை மயக்கி, இந்தியாவுக்கு விஞ்ஞான ரகசியங்களை வெளியிட்டு உதவச் செய்வாள் என்கிறீர்கள்!''

''பெண்மையின் போதை ஏற்றும் சாகஸம் பயன் தரவில்லையானால் நீ பலாத்காரத்துக்கும் உட்பட நேரிடும்!''

படிப்படியாக உயர்ந்துகொண்டே வந்த மைக்கேலின் ஆத்திரம் இப்போது கட்டு மீறிப் பீறிட்டுப் பாய்ந்தது. தன் கரத்தில் பாதி அருந்திவிட்டுப் பாக்கி வைத்திருந்த மதுவைக் கடைசியாகப் பேசியவன் மீது முகத்தைப் பார்க்க வீசினான்!

கவிந்து கொண்டு வந்த இருளை விரட்டும் விதமாக ப்ளேஸ் டி கன்கார்டேயில் ஏற்றப்பட்ட நூற்றுக்கணக்கான விளக்குகள் அந்தச் சதுக்கத்தை ஒரு சொப்பன லோகமாக மாற்றிவிட்டன. பொங்குபுனல் ஒன்றின் விளிம்பில் அமர்ந்து கதை சொல்லிக் கொண்டிருந்த மைக்கேல் இந்தத் திடீர் மாற்றத்தால் பாதிக்கப் பட்டவனாகக் கதையை நிறுத்தி விட்டதோடல்லாமல் ''இப்படித்தான் அவன் முகத்தை நோக்கி மதுவை வீசினேன்!'' என்று கூறியபடியே விளையாட்டாக மூன்று விரல்களை நீரில் நனைத்துச் சில துளிகள் அனுபமாவின் முகத்தில் விழுமாறு தெறித்தான்.

அனுபமா கலகலவென்று சிரித்தாள். அச் சிரிப்பிலே ஜீவன் இல்லை. ''அப்புறம் என்ன நடந்தது?'' என்று கேட்டாள்.

''ஹோட்டலுக்குத் திரும்பும்போது சொல்கிறேன். இந்த மாயா ஜாலக் காட்சியை இரண்டு நிமிஷங்கள் ரசித்து விட்டு ஒரு டாக்ஸி பிடிப்போம்'' என்றான் மைக்கேல். (தொடரும்)

# மை விழி மகளிர்

சீதா

''வர வர வெய்யில் ஏறிக் கொண்டே போகிறது. தாங்கவே முடியவில்லே'' என்றுள் அகிலாண்டம்மாள்.

''வெய்யிலேப் பார்த்தா கை பரபர என்கிறது. அப்பளாம் இடு, வடாம் இடு என்கிறது!'' என்றுள் அத்தை.

''அப்பளாம் இடறதாவது அத்தை? கடைக்குப் போனல் வேண்டிய அப்பளாம் தான் கிடைக்கிறதே!'' என்றுள் சாரு.

''ஆமாண்டியம்மா இந்தக் காலத்திலே எல்லாம் கடைக்குப் போய் வாங்கறதுங்கிற பழக்கம் ஏற்பட்டுப் போச்சு. அந்தக் காலத்திலே அப்படியா? கிராமத்திலே ஒருத்தர் வீட்டிலே அப்பளாம் இடறதா இருந்தால், ஊரிலே இருக்கிற பெண்மணிகள் எல்லாரும் வந்துடுவா! ஒரே நாளிலே ஆயிரம் அப்பளாம் கூட இட்டுவிடுவா! ஆனு இன்னைக்கு ஏதோ காசு கொடுத்தாக் கடையிலேயாவது கிடைக்கிறதே. நம்ம தமிழ் நாட்டு அப்பளாமும் வடாமும் வற்றல்களும் என்றுதான் சந்தோஷப் பட்டுக் கொள்ள வேண்டியிருக்கிறது'' 'என்றுள் அம்மா அகிலாண்டம்.

''ஆமாம் அம்மா! அப்பளாமும் வடாமும் இனி யார் கையாலே செய்துண்டிருப்பா? எல்லாத்துக்கும் கொஞ்ச நாட்களிலே மிஷின் வந்துடும். ஆயிரம் அப்பளாம் என்ன, ஒரே நாளில் பத்தாயிரம் கூடத் தயாரிக்கும் தொழிற்சாலைகளே ஆரம்பமாகும். அப்பளாம் டெக்னுலஜி படித்துத் தேறிய இன்ஜினீயர் தோன்றும் நாள் வெகு தூரத்தில் இல்லே!'' என்றுள் சாரு.

''ஆமாம். அதுவும் அவசியம்தான். இனிமேல் நம்ம நாட்டிலே படிச்ச பசங்களே வெளி நாட்டுக்காரா முன்னே மாதிரி ஏத்துக்கத் தயாராய் இல்லே. ஆகவே, நம் ஊர் படிச்ச பசங்கள் எல்லாம் அவா அவா கிராமத்துக்குத் திரும்பி விவசாயம், தொழில் பண்ணை காலம் வரப்போகிறது'' என்றுன் சுந்தர். ஹேமாதொடர்ந்தாள்:

''எம். டெக் படிச்ச பெண், சாணியை விரட்டி தட்டுவதற்குப் பதில்'காஸா'க மாற்றி அடுப்பு எரிக்கவும், உரமிடவும் விஞ்ஞான முறையில் பயன்படுத்துவா. எம். ஏ. படிச்ச பையன் மாட்டைக் கட்டிப் பழைய முறையில் ஏர் உழ மாட்டான். டிராக்டர் செலுத்தி நிலத்தைப் பண்படுத்துவான். கிராமங்களில் சிறு தொழில்கள் ஏற்படப் போகின்றன. கிராம மக்கள் வேலே தேடி நகர்ப்புறத்துக்கு வராமல் கிராமத்திலேயே எல்லாத் தொழில்களும் ஏற்பட்டு, எல்லா வசதிகளும் கிடைக்கப் போகின்றன. எதிர்கால மக்கள் கிராமங்களே மிக விரும்பி நாடப் போகிறுர்கள். நகர வாழ்க்கையின் மவுசு குறையப் போகிறது!''

''எதிர்காலத்தில் எவ்வளவு இயந்திரங்கள் வந்து வாழ்க்கையே இயந்திர கதியாக மாறினுலும் — நல்லவேளே மனித மனம் ஒன்றுவது சவு இரக்கம் பச்சாதாபத்தோடிருக்கே!'' என்றுர் இவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டே கூடத்தில் பேப்பர் படித்துக் கொண்டிருந்த சாருவின் தந்தை சங்கரன்.

ஒரு புதிர் மாதிரி அவர் பேசவும் ஹேமா, ''என்ன மாமா பேப்பரிலே என்ன கவையான செய்தியைப் படிச்சுட்டு இப்படிப் பேசறேள்?'' என்றுள்.

''சமீபத்தில் இஸ்ரேலுக்கும் எகிப்துக்கும் சண்டை நடந்ததல்லவா? இந்தச் சண்டையில் இரண்டு பக்கமும் எத்தனேயோ பேர் இறந்திருப்பார்கள். ஓர் இஸ்ரேலியப் பெண்










■ இன்ஸ்பெக்டர் கண்ணை மூடிக் கொண்டிருக்கிறாரே என்று யோசிக்காதீர்கள்! சட்டம் நிச்சயம் தூங்காது! லூகாஸ் டி.வி.எஸ். தொழிலாளர் சங்கத்தின் ஆண்டு விழாவில் 'சட்டம் தூங்காது' நாடகக் காட்சி. பார்த்து மகிழ்ந்தவர்களில் சேர்மன் ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ணாவும் ஒருவர்.

■ இந்திய கிரிக்கெட் கோஷ்டிக்கு உதவி காப்டனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள திரு எஸ். வெங்கடராகவனுக்குத் தமிழக கிரிக்கெட் சங்கம் தேநீர் விருந்தளித்துக் கௌரவித்தது. திரு வி. ஆர். பட்டாபிராமன் இந்தப் பாராட்டு விழாவுக்குத் தலைமை வகித்தார். பழம் கிரிக்கெட் ஆட்டக்காரர்களான வி. ராமசாமி, எம். ஜே. கோபாலன் ஆகியோர் வெங்கட்டுக்கு அறிவுரைகள் வழங்கி இந்தியாவுக்கு வெற்றியுடன் திரும்ப வாழ்த்தினர். ஒவ்வொரு கிரிக்கெட் ரசிகரின் நல்லெண்ணமும் அவருக்குத் துணையாக இங்கிலாந்துக்குப் புறப்படுகிறது.



■ வாயுவேக மனோவேகம் என்றில்லாவிடினும் மேனாடுகளில் கார்கள் விரையும் வேகம் பழக்கமில்லாத நமக்குக் குலை நடுக்கம் ஏற்படுத்துவதாகும். சிறந்த சாலைகளும் தரமான கார்களும் இருந்த போதிலும் விபத்துக்களும் மிகுதிதான். குறிப்பாக நெடுஞ்சாலைப் பணித் துறையினர், சாலையைச் செப்பனிட்டுக் கொண்டிருக்கையில் பாய்ந்தோடும் கார்களால் விபத்துக்குள்ளாவது நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. இதன் பொருட்டு மேற்கு ஜெர்மனியில் பிளாஸ்டிக்கினாலான மனிதனைத் தயாரித்திருக்கிறார்கள். கொடி பிடித்திருக்கும் இம் மனிதனின் கை தானியங்கு முறையில் மேலும் கீழும் அசைந்து கொண்டே விரைந்து காரோட்டிகளை எச்சரிக்கும், சாலையைத் தொழிலாளர் பழுதுபார்த்துக் கொண்டிருக்கின்றனர் என்று.

---

மனி தன் சகோதரனைப் பற்றி ஒரு தகவலும் தெரியாமல் தவித்திருக்கிறாள். இவ்விஷயத்தை எகிப்து ஜனாதிபதியின் மனைவியாகிய திருமதி ஜிஹான் ஸதத்துக்கு எழுதியிருக்கிறாள்.

''அதற்கு திருமதி ஸதத் பின்வருமாறு பதில் எழுதியிருக்கிறாள்: 'அம்மையே, உன் சகோதரனின் உடலைத் தேடிக் கண்டுபிடிக்க எல்லா முயற்சியும் செய்தேன் என்று மிகவும் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். உன் சகோதரனின் உடலை எங்கள் படையினர் எவ்வளவு தேடியும் கண்டுபிடிக்க முடியவில்லை. அவன் கொரில்லாப் போர் முறைப்படி யாருமறியாமல் நீரில் மூழ்கி வந்து போர்ட் ஸையத் துறைமுகத்தை 'டைம்-பாம்' குண்டுகள் பொருத்தித் தாக்க முயன்றபோது கடலலைகள் அவனைக் கொண்டு போயிருக்க வேண்டும். எங்கள் முயற்சியின் பயனாக அவனுடைய தோழனுடைய உடல் கிடைத்துள்ளது. தேடும் பொறுப்பை ஏற்றுக்கொண்டவர்கள் இப்பணியில் எவ்வளவு முயன்றும் பயன் கிடைக்கவில்லை என்கிறார்கள். போர் முனையில் உங்கள் சகோதரன் இறந்திருக்கிறான். அது வீர மரணம். பெருமைப்படத் தக்கது. எனினும் என் ஆழ்ந்த அனுதாபங்களை உங்களுக்கும் உங்கள் தாயாருக்கும் தெரிவித்துக் கொள்கிறேன். போருக்கு வெற்றி தோல்வி தெரியாது. ஏனெனில் வெற்றியடைந்தவர்களும், தோல்வியுற்றவர்களும் ஏராளமான பொருள் நஷ்டம், உயிர் நஷ்டம் அடைகிறார்கள் இந்தப் போர் தொடங்கிய முதல் நாளே என் கணவரின் தம்பி — அவன் ஒரு விமானமோட்டி -- உயிர் நீத்தான்' என்று பதில் எழுதி யிருக்கிறாள். இதைப் படித்தவுடன் என் மனசு உருகிவிட்டது!'' என்றார் சங்கரன்.

''என்ன அருமையான ஆறுதல் வார்த்தைகளை ஸ்ரீமதி ஸதத் கூறி யிருக்கிறார்!'' என்று அத்தை வியந்தாள்.

''அதுதான் 'பண்பாடு' என்கிறது!'' என்றார் சங்கரன்.

# வருகுது ஒரு புதிய மென்மை உங்கள் துணிகளுக்கு: புதிய லக்ஸ் பவுடர்




துணிகளுக்கு மென்மை-
யூட்டும் விசேஷப் பொருள்கள்
உள்ளன புதிய லக்ஸ் பவுடரிலே.
மதிப்புமிக்க ஆடைகளை அவை
புதுக் கருக்கான மென்மையோடு
பேணுகின்றன...சலவைக்கு சலவை.
மென்மையும் கொஞ்சும் லக்ஸ்
சலவையிலே...பட்டாடைகளுக்குப்
பூப்போன்ற மெல்லிழைவு*...இராக் கால
உடைகள், ப்ரா, அனைத்துக்குமே ஆர்வமிக்க பராமரிப்பு...விலையுயர்ந்த
காருக்கான ஆடைச் செல்வங்கள் சட்டைகளுக்கும், ஸிந்தெடிக் துணிகளுக்கும்
அதி உன்னதமான பொலிவு. சலவைக்குரியது லக்ஸ்...மென்மை தவழும் பவுடர்.

சென்னையிலும் பெங்களூரிலும்
மட்டுமே கிட்டும்.



* இந்தியாவிலே, சர்வதேசக்
கம்பளிச் செயலகத்தின்
நற்சான்றுபெற்ற வூல்மார்க் முத்திரை
பெற்ற ஒரே ஒரு சலவைப்
பவுடர் லக்ஸ்.

## நேர்த்தியான துணிகளைப் புதுக் கருக்கான மென்மையோடு வைத்திருப்பது புதிய லக்ஸ் பவுடர்

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-LXP-7-140 TM

# உள்ளிருக்கும் உறுதுணை



'நர்ஸ்' பயிற்சி பெறுவோருக்கும் பல்வேறு எலும்புகளைப் பற்றிய போதனை.

உயர்ந்த உறுதியான கான்கிரீட் கட்டிடத்தைத் தாங்கி நிற்பவை, கண்ணுக்குத் தெரியாமல் உள்ளே பொதிந்துள்ள எஃகுக் கம்பிகள். என்றால், நம் உடலைத் தாங்கி நிற்பவை உள்ளே மறைந்துள்ள அடக்கமான எலும்புகள். பெரிதும் சிறிதுமாக, பல வடிவங்களில் அமைந்துள்ள 206 எலும்புகளும் ஒன்றுடனொன்றும் தசைகளுடனும், பிணைந்து பல பணிகள் ஆற்றுகின்றன. உடலுக்கு ஒரு வடிவம் கொடுக்கின்றன; உடலைத் தாங்குகின்றன; மூளை, இதயம், நுரையீரல் போன்ற முக்கிய உறுப்புக்களுக்குப் பாதுகாப்புக் கவசமாக விளங்குகின்றன; உடல் இயங்குவதற்கு எலும்பு மூட்டுகள் அசைந்து துணை புரிகின்றன.

உடலில் உள்ள எலும்பு வெறும் அஃறிணைப் பொருளல்ல; அது உயிரணுக்கள் நிறைந்த பகுதியே. அதனுள்ளே ஒரு ஜீவ-ரசாயனத் தொழிற்சாலையே இருக்கிறது. இங்கேதான் ரத்த அணுக்கள் உற்பத்தியாகின்றன. இரத்தத்துக்குத் தேவையான சிவப்பு அணுக்கள் தயாராகின்றன. எலும்பே உடலுக்குத் தேவையான சுண்ணாம்பு அம்சத்தைச் சேர்த்து வைக்கும் களஞ்சியம்.

உருவத்தைக் கொண்டு எலும்புகள் நான்கு வகைப்படும். நீண்டவை (தொடை, மேல் கரம், முன் கை, கால்); சிறியவை (உள்ளங் கை, பாதம்); தட்டையானவை (கபாலம், தோள்பட்டை); வடிவ ஒழுங்கற்றவை (மணிக்கட்டு, முதுகுத் தண்டு) என்பன அந்த வகைகள்.

நீண்ட எலும்புகளின் அமைப்பே விந்தையானது. இயற்கை ஓர் அற்புத எஞ்சினியர் என்ற உண்மையை உணர்த்துவது. நீண்ட எலும்புகள் உறுதியாக இருக்கும்; ஆனால் பளுவாக இருக்காது. ஏனென்றால் அவற்றின் நீளவாக்கில் மையப்பகுதி குழலாக அமைந்திருக்கிறது! தொடை எலும்பு போன்ற நீண்ட பெரிய எலும்பு கல்லைப் போல் அடர்த்தியாக இருந்தால் என்ன பளு இருக்கும்! ஆயினும் மையப் பகுதி வெற்றிடமுமல்ல. எலும்புக் கூழ் நிறைந்திருக்கும். எலும்பின் மேல், கீழ் இரு முனைகளிலும் காணும் ஒரு சவ்வுப் பொருள் பிற எலும்புகளுடன் ஒட்டவும், இயக்கங்களில் ஈடுபடவும் ஏற்ற பக்குவத்துடன் இருக்கும். எலும்போடு எலும்பாக உறை போலச் சுற்றியிருக்கும் பெரியாஸ்டியம் என்ற மற்றொரு சவ்வுப் பொருளே எலும்பு அணுக்களைத் தயாரிக்கும் தொழிற்சாலை. தேவையானபோது எலும்புகளின் பராமரிப்பு நிகழும் பணிமனையும் இதுவே. எலும்பையும் தசையையும் இணைத்து வைப்பதும் இந்த உறையே.

கைகால்களில் உள்ள நீண்ட எலும்பின் முனைகளில் குருத்தெலும்பு என்னும் இளகிய அமைப்பும் இருக்கிறது. எலும்பு முடிந்து இது தொடங்கும் இடத்தில் இடையிலுள்ள பகுதியே வளர்ச்சிப் பகுதியாகும். இளமையில் உடல் வளர்வது என்றால் முக்கியமான எலும்பு வளர்ச்சியே. எலும்பு வளர்ச்சி என்பது ஓர் ஆச்சரியமான வளர்ச்சி. எலும்பின் வெளிப்புறத்தில் சுண்ணாம்பு அம்சம் சேரச் சேர, அது தடித்து உருவத்தில் பெரிதாகிறது; அதே சமயம் எலும்பின் மையக் குழாய்ப் பகுதியும் அகன்று அகன்று பெரிதாகி, எலும்பின் வடிவத்தைப் பெரிதாக்குகிறது. சாதாரணமாக இருபத்தொரு வயது வரை இந்த வளர்ச்சி நன்கு தெரியும்.

கபாலம் என்னும் பத்திரமான அற்புதப் பேழை இருபத்தெட்டு எலும்புகளால் ஆனது. எல்லாம் கோணல் மாணலான எலும்புகள். இதிலே ஜோடியாக இருப்பவை பதினொரு ஜதை. கீழ்த்தாடை தவிர மற்றவையெல்லாம் அசையாமல், உறுதியாக ஒன்றுடன் ஒன்று பிணைந்தவை. முகத்துக்கு வடிவம் கொடுப்பவை இவை. மூளையைப் பாதுகாப்பவையும் இவையே. மூக்கின் நடுவே இருக்கும் எலும்பு காகித அட்டை போன்று மெல்லியது.

முதுகுத் தண்டு என்னும் எலும்புச் சங்கிலித் தொடர் மற்றொரு முக்கிய பகுதி. இருபத்தாறு மணிகளைக் கோத்தது போன்ற இந்தத் தொடரிடையே அமைந்த குழாய், நரம்புத் தண்டுக்குக் காப்பு. உடல் முன்னும் பின்னும் பக்கவாட்டிலும் அசைவதற்கு இதுவே துணை. மார்பின் கவசமான மார்புக் கூடு எலும்புகளின் பிறப்பிடம் இதுவே.

முதுகுத் தண்டு எலும்புகள் உடலின் பழக்கத்துக்கு ஏற்ப நிரந்தர வடிவம் கொள்கின்றன. எப்போதும் குனிந்தபடி வேலை செய்வது, அமர்வது நடப்பது என்று இருப்பவர் கூனிப் போவதற்கும் மார்புக் கூடு

# ஆரோக்கியம் அழைக்கிறது



ஆளுக்கு ஆள் உயரம் வித்தியாசப்படுவது கால் எலும்பு நீளத்தினால் தான்! சத்து நிறைந்த உணவும் சுறுசுறுப்பான பழக்கங்களும் எலும்பு ஆரோக்கியத்துக்கு உதவும்.

குன்றிப் போவதற்கும் எலும்புகளின் இந்த இயல்பே காரணம். அதனால்தான் குழந்தைப் பருவ முதலே நிமிர்ந்து நிற்கவும் நேராய் நடக்கவும் பழக்கினால் முதுகெலும்பு அழகுடனும் கம்பீரமாயும் விளங்கும். பாரம் தூக்குவது போன்ற பணிகளிலும் முதுகெலும்புக்கு அசதி ஏற்படும்படி ஒரேயடியாகக் குனிந்து சரேலென்று நிமிரலாகாது. ஒரு காலை முழந்தாளிட்டுக் குனிந்து நிமிர்வது முதுகெலும்புக்கும் நல்லது; நீண்ட நேரம் பணி புரிந்தாலும் அலுக்காது.

காரணமில்லாமல் அடி முதுகு வலிப்பது என்பது 'பலருக்கும் வரும் ஒரு தொந்தரவு. 'பரிணாம வளர்ச்சியில் மனிதன் ஏதோ ஐந்து லட்சம் ஆண்டுகளாய்த்தான் நிமிர்ந்து நடக்கிறான்; மனித உடல் இந்த நிலைக்கு முற்றிலும் பழக்கப்படவில்லை. இன்னும் சில லட்சம் ஆண்டுகளில் இது சரியாகிவிடும்!' என்பது சில நிபுணர்கள் கருத்து.

அடி முதுகெலும்பின் பரந்த இடுப்புப் பகுதியும் தொடையின் மேல் நகட்டு எலும்புகளுமாகச் சேர்ந்து ஒரு சட்டி போன்ற அமைப்பை ஏற்படுத்துகின்றன. இது வயிற்று உறுப்புக்களைப் பத்திரமாகப் பாதுகாக்கும் பாத்திரம். பெண் உடலில் இந்தப் பகுதி அகன்று, வயிற்றில் வளரும் கருவைப் பத்திரமாக வைத்துக் கொள்ளும் இயற்கைத் தொட்டிலாக அமைகிறது. ஓர் எலும்புக் கூட்டின் இந்தப் பகுதி அமைப்பைப் பார்த்தே அது ஆணுடையதா, பெண்ணுடையதா என்று அடையாளம் சொல்லிவிடலாம்!

கையும் காலும் விரைவு இயக்கங்களுக்கு வாகான எலும்புச் சேர்க்கையால் அமைந்தவை. விலங்குகள் நான்கு காலையும் பயன்படுத்தி நடக்கின்றன, ஓடுகின்றன. மனிதனும் ஓரளவு அப்படித்தான்! இரண்டு கால்களால் நடந்தாலும், கால் அசைவுக்கு ஏற்றபடி கைகளையும் அசைக்கவேண்டியிருக்கிறது. பாதமோ உடலின் சுமை அனைத்தையும் தாங்க ஏற்றபடி அமைந்துள்ளது.

மணிக்கட்டு, உள்ளங்கை, விரல்கள், கணுக்கால், பாதம், கால் விரல்கள் — இவைதாம் எத்தனை அசைவுகளுக்கு ஆதாரம்! எத்தனை கலைகளுக்கு ஆரம்பம்! மனித குல கலாசாரத்தின் தோற்றமும் வளர்ச்சியும் இவற்றை ஒட்டியே இருக்கின்றன என்று கருதும் அளவு முக்கியமானவை இந்தச் சிறு எலும்புகள்.

பிற உயிரினங்களைப் போல் மனிதனின் கையும் விரல்களும் பொருள்களைப் பற்றவும் பிடிக்கவும் மட்டுமா பயன்படுகின்றன? சூடு குளிர் என்ற உணர்வுகளை அறிய மட்டுமா பயன்படுகின்றன? உள்ளத்து உணர்ச்சிகளை முகத்தாலும் வாக்காலும் வெளிப்படுத்தியும் போதாது என்று பேசும்போது கையும் விரல்களும் எப்படி விரைகின்றன! எத்தனை பாவங்களை அபிநயிக்கின்றன!

ஆளுக்கு ஆள் உயரம் எதனால் வித்தியாசமாகிறது? கால் எலும்பு நீளத்தால்தான். குட்டையோ நெட்டையோ, இடுப்பு முதல் கழுத்து வரை ஆண்களின் சராசரி அளவு இருபத்தெட்டு அங்குலம்; பெண்களுக்கு இந்தச் சராசரி அளவு இருபத்து நான்கு அங்குலம் இருக்கும். ஆனால் மொத்த உயர வித்தியாசம் நேர்வது கால் எலும்புகள் நீளமாகவோ குட்டையாகவோ இருப்பதனால் தான். பலரும் ஒன்றாக உட்கார்ந்து கொண்டிருக்கும்போது யார் நெட்டை யார் குட்டை என்று சுலபமாகத் தெரிகிறதா, பாருங்கள்!

எலும்புகளின் இணைப்பே மூட்டுகள். இதிலே பல வகை: கபாலத்திலே கீழ்த் தாடை தவிர மற்றவை அசைவற்று இணைந்த மூட்டுகள்; கீழ்த் தாடையோ கதவின் கீல் போன்று இணைந்தது; பின் கழுத்தின் எலும்பு மூட்டு முளை போன்றது; தோளிலும் இடுப்பிலும் கைகால் எலும்புகள் கிண்ணத்தில் சுழலும் பந்தைப் போன்ற அமைப்பில் உள்ளன; முழங்கையும் முழங்காலும் கீல் அமைப்பில் ஆனவை. (கையிலும் காலிலும் மட்டுமே விரலுக்கு விரல் உள்ள மூட்டுக்களையும் கணக்கிட்டால் நாற்பது கீல் மூட்டுகள் உள்ளன!) முதுகு எலும்புகள் ஒன்றுடன் ஒன்று நழுவிக் கொள்ளும் இயல்பில் இணைந்தவை.

மூட்டுகள் என்னும் இந்த இணைப்புக்களே உடலின் இயக்கத்துக்கு முக்கிய துணை. இரண்டு பொருள்கள் ஒன்றுடன் ஒன்று உராய்ந்தால் தேய்மானம் நேருகிறது. மூட்டின் எலும்புகளிலும் இப்படித் தேய்மானம் நேராமல் தவிர்க்கவே முனைகளில் குருத்தெலும்பு சுற்றியிருக்கிறது. இதில் கசியும் உயவுப் பொருள் (கீலுக்கு எண்ணெயிட்டாற்போல்) உராய்வை மிதப்படுத்தும்; இதனால் இயக்கங்கள் இயல்பாகவும் எளிதாகவும் அமைகின்றன.

எலும்பின் முக்கிய இடர் முறிவு. மனிதன் தோன்றிய காலம் முதல் எலும்பு முறிவும்

## நவமான நவம்!

மற்ற எந்த எண்ணுக்கும் இல்லாத சில சிறப்புக்கள் '9'க்கு உண்டு. அதில் ஒன்று: எத்தனை இலக்கம் உள்ள எண்ணை வேண்டு மானாலும் எடுத்துக்கொள்ளுங்கள். அதைத் திருப்பிப் போடுங்கள். இப்போது பெரிய தொகையில் சிறியதைக் கழியுங்கள். மீதி வரும் எண் ஒன்பதால் வகுபடும். அதன் இலக்கங்களைக் கூட்டினால் கூட்டுத் தொகை ஒன்பதாகும். இதோ பாருங்கள் உதாரணம்: '8362'. இதைத் திருப்பிப் போட்டால் '2638'. 8362 (—) 2638=5724. இதை 9-ஆல் வகுங்கள். மீதமின்றி வகுபடும். கூட்டிப் பாருங்கள்: 5+7+2+4=18. அதாவது 1+8=9!

- சம்பத் குமாரி

நேர்ந்து கொண்டுதான் இருக்கிறது. உடலின் வேறு பல உறுப்புக்களைப் போல், எலும்பும் ஓயாமல் தன்னைத் தானே புதுப்பித்துக்கொண் டிருக்கிறது. எனவே, முறிவு ஏற்பட்டவுடன் சில நாட்களில் முறிந்த இடம் வளர்ந்து தானே ஒட்டிக் கொண்டு விடுகிறது. அப்படி ஒட்டத் தொடங்குவதற்குமுன் அடிபட்ட எலும்புகள் கோணல் மாணலாய்ப் பிசகிக் கொண்டிருந் தால், அந்தக் கோணல் வடிவத்திலேதான் எலும்பு வளர்ச்சி கூடும், பிறகு மாற்ற முடியாது. அதனால்தான் அடிபட்டவுடன், எலும்பு முறிவு என்ற சந்தேகம் வந்தவுடனே முறிந்த எலும்பைச் சரியான நிலையில் பொருத்தி, அசையாமல் இருக்கக் கட்டுப் போட்டு முறிந்த எலும்பு தானே வளர்ந்து கூடுவதற்கு உதவி செய்கிறார்கள் வைத் தியர்கள். எலும்பு முறிவு சிகிச்சையின் நுட்பமே இதுதான். முறிவு வெறும் கீற லாகவும் இருக்கலாம். நொறுங்கிப் போன அளவும் இருக்கலாம். தசையையே கிழித்துக் கொண்டு வருவதாயும் இருக்கலாம். தன் மைக்கு ஏற்ப, குணமாகும் காலம் நீடிக்கும். முறிந்த எலும்பு ஒட்டிக் கொண்ட சில வாரங்களில் முற்றிலும் பழைய வலு திரும்பி விடுவது ஓர் இயற்கை ஆற்றல்தான்.

எக்ஸ்ரே கண்டுபிடிப்பு எலும்பு முறிவுக் குச் சீரான சிகிச்சை அளிக்க உதவி வரும் நல்ல துணை. விபத்துக்களில் பலமாகச் சேத மடைந்து, இயல்பாகக் கூடவைக்க முடி யாத எலும்பு முறிவுகளைக்கூட இப்போது நவீன முறைகளில் குணப்படுத்துகிறார்கள். ஒரு வகைச் சிகிச்சையில் எலும்பிலே துளையிட்டுச் சில நாட்கள் எஃகு ஆணிகளைச் செலுத்தி வைப்பதும் உண்டு. உடலின் வேறொரு பகுதியி லிருந்து எடுத்த எலும்பை, விபத்து நேர்ந்த இடத்தில் ஒட்ட வைத்து வளர்ச்சி யின் விரைவுக்கு உதவுவது ஒரு சிகிச்சை. அபூர்வமாக மற்றவர் உடலிலிருந்தும் எலும்பை எடுத்து இன்னொருவருக்கு ஒட்ட வைப்பது உண்டு. ரஷ்யாவில் இரத்தச் சேமிப்பு நிலையம் போல் எலும்பு சேமிப்பு நிலையமும் இருக்கிறது!

கால் முடம் போன்ற எத்தனையோ பிறவி ஊனங்களை இத்தனை காலமாக இயல்பாக ஏற்றுக் கொண்டுவிட்டோம். இன்று முட நீக்கத் துறை வளர்ச்சியடைந்து ஆயிரக் கணக்கான குழந்தைகளின் பிறவிக் குறை களை நேராக்கி வருகிறது. தேவையானால் ரண சிகிச்சையும் செய்து சீர்ப்படுத்து கிறார்கள்.

உணவில் சத்துக் குறைவால் நேரும் பல இடர்களில் ஒன்று ரிக்கெட் என்னும் கணை நோய். டி வைட்டமின் குறைவும் கால்ஷியம் பாஸ்பரஸ் சத்து குறைவும் குழந்தைகளின் எலும்பு நோய்க்குப் பெரிதும் காரணம்.

உடலில் பலத்த காயம் படும்போது, எலும்பை நேரே பாதிக்காவிட்டாலும் எலும்பைச் சுற்றிய குருத்தெலும்பையும் நார்த் திசுக்களையும் பாதிக்கும். வடக் கயிறு போன்றவை அவை. விபத்துக் காயத்தினால் அவற்றின் இழை அறுந்து போனால், அல்லது முற்றிலும் அறுந்து போனால் பொறுக்கமுடி யாத வலி ஏற்படும். அப்பகுதியைச் சற்றும் அசைக்க முடியாதபடி வலிக்கும். அப்போது சிகிச்சை, அவற்றைப் பழைய நிலையில் சீராகப் பொருத்தி, அசைவற்று ஓய்வில் இருக்கச் செய்வதேயாகும். சேதம் அதிகமான போது, ரண சிகிச்சையும் இதற்குத் தேவைப் படுவதுண்டு. மூட்டுச் சுளுக்கும் இப்படிப் பட்டதே.

முட்டி பிசகுதல் முதல் கீல் மூட்டு வாதம் வரை எலும்பு பற்றிய தொல்லைகள் இன் னும் பல. துரதிருஷ்டவசமாக, காசம் நிறைந்துள்ள நமது நாட்டில் எலும்புக் காச மும் சகஜமாக இருக்கிறது. அங்ஙனமே புற்று நோயும் எலும்பைப் பற்றுகிறது. இவற்றைத் தொடக்க நிலையிலேயே கவ னிக்க முடிந்தால் சிகிச்சையளித்துக் கட்டுப் படுத்தலாம். பிற உறுப்புக்களின் புற்று நோய் இளமையில் வராது. ஆனால் எலும் பிலே புற்று நோய் இளமையில் பற்றுகிறது; காரணமின்றியே வருகிறது.

உள்ளிருந்து உடலனைத்தையும் கடைசி வரை தாங்குபவை எலும்புகளே. இவை உட லுக்கு உறுதுணையாக விளங்க, எளிய உண வானாலும் சத்து நிறைந்ததாய் இருக்க வேண் டும் என்பதோடு சுறுசுறுப்பான பழக்கங்க ளும் பெரிதும் உதவும்.

ஆலோசனை: **டாக்டர் எம். நடராசன்**
கட்டுரை: **தம்பி சீனிவாசன்**

## வரசித்தி விநாயகர் திருப்பணி

சென்னை பெரம்பூர் அருகிலுள்ள செம்பியத் தில் பெரும்பாலும் தொழிலாளர் பெருமக்கள் ஒன்றுகூடி வரசித்தி விநாயகரை முக்கியமாகக் கொண்டு சிவவிஷ்ணு ஆலயம் எழுப்பியிருக் கிறார்கள். இங்கு நவக்ரஹங்களுக்கும், ஆஞ்ச நேய ஸ்வாமிக்கும் சந்நிதிகள் உள்ளன. மேலும் அம்பாளுக்கும் முருகப் பெருமானுக் கும் சந்நிதிகள் அமைக்கவும், முன் மண்டபம் எழுப்பவும் மதில் சுவரைப் பூர்த்தி செய்யவும் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. அருட்செல்வர் திரு முருக கிருபானந்தவாரியார் இத்திருப்பணிக்குத் தலைமை தாங்குகிறார். அன்பர்கள் அடியிற் காணும் முகவரிக்கு நிதி அனுப்பக் கோரு கிறோம்: திரு பி. கோதண்டபாணி, பொருளா ளர், ஸ்ரீ வரசித்திவிநாயகர்-சிவவிஷ்ணு ஆலயத் திருப்பணிக் கமிட்டி, 182, திரு வி. க. நகர், செம்பியம், சென்னை - 11.

# எஸ்ட்ரெலா சக்தி






இந்த சக்தி
தரும் ஒலி
உங்கள்
காதுகளில்
ரீங்காரம்
செய்கிறது.

இந்த சக்தி
தரும் ஒளியை
நீங்கள்
கண்ணெதிரே
காணலாம்





**உங்கள் டிரான்ஸிஸ்டர் மற்றும் டார்ச்சில் எஸ்ட்ரெலா சக்தி காட்டும் அதிசயம் பாரீர்**



**எஸ்ட்ரெலா** பாட்டரிகளின் சக்தி: குடத்தில் காவேரிபோல! எஸ்ட்ரெலா பாட்டரீஸ் லிட்., பம்பாய்-400 019.

CMEB-2-203

# What do seven different tyre companies have in common?

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| M | | F | | G | | |
| A | | I | | O | P | |
| **N** | **I** | **R** | **C** | **O** | **R** | **D** |
| S | N | E | E | D | E | U |
| F | C | S | A | Y | M | N |
| I | H | T | T | E | I | L |
| E | E | O | | A | E | O |
| L | K | N | | R | R | P |
| D | | E | | | | |

That's it. Nircord - India's first nylon tyre cord.
Nircord is the super-strengthener for all
better-grade tyres made in India today.

**nircord**®

® Regd. Trade Mark

**Nirlon Synthetic Fibres & Chemicals Ltd.**

Nirlon House, 254-B, Dr. Annie Besant Road, Bombay-400 025.

Interpub/NIR-C/46A/74

# திருடி

**க**தாநாயகி திருடியாக இருந்தால், அவள் செய்யும் திருட்டுத் தொழிலிலும் ஒரு தர்மம் இருந்தாக வேண்டும்! அந்த 'தர்மம்' இப் படத்தில் நன்றாய்க் கடைப்பிடிக்கப் பட்டிருக்கிறது. தனக்குக் கிடைக்கும் கொள்ளைப் பணத்தில் பாதியை அம்மன் காணிக் கையாகச் செலுத்தி விடும் திருடி நல்லவள் தானே! ஆனால் அதே திருடி, அம்மன் கோயில் உண்டியலிலிருந்து ரூபாய் ஐயாயிரம் திருடிக் கதாநாயகனுக்கு வேலை கிடைக்க உதவி செய்கிறாளே, அது என்ன தர்மம் என்று கேட்கிறீர்களா? கதாநாயகி, கதாநாயகனுக்கு உதவுவதே தர்மம்தானே! சின்னஞ் சிறு வயதிலேயே சந்தர்ப்பக் கோளாறால் திருட ஆரம்பித்து விட்ட ராணி, உடன் பிறந்த தம்பியைப் பிரிந்து அநாதை யாய்த் திரிந்தவள், இடைவேளைக்குப் பிறகு எப்படி ஆங்கிலம் பேசும் அளவுக்கு நாகரிக மாக மாறினாள்? நேற்றுவரையில் தெருத் தெருவாய்ச் சுற்றிக் கொண்டிருந்த அந்த முடிச்சுமாறி — கதாநாயகனுக்கும் சரி, மற்றவர்களுக்கும் சரி, திருடி ராணிதான் என்று எப்படித் தெரியாமல் போயிற்று என்றெல் லாம் கேட்டுக் குழப்பிக் கொள்ளாதீர்கள். கதாநாயகியான 'பெரிய' நடிகைக்குப் பல வித உடைகளிலும், தோற்றங்களிலும் வருவதற்கு 'சான்ஸ்' வேண்டாமா? மேலும் திரைக்கதையின் 'சஸ்பென்ஸை' மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். கதாநாயகனுக்கே அவள் திருடிதான் என்று தெரியாத போது உங்களுக்குமட்டும் எப்படித் தெரிந்து விடும்? உஷ்! பேசப்படாது!

கே. ஆர். விஜயா, நெகிழ்ந்து, சிரித்து, மிரட்டி உருட்டியே படத்தை ஓட்டியிருக்கிறார். பிரமாதமாக நடிக்க அவருக்கு 'சான்ஸ்' இல்லாமற் போனதற்குக் காரணம் திரைக் கதைதான்!

ஜெய்சங்கர் 'கும்கும்' குத்துச் சண்டை விடும் ஹீரோ! பஸ் ஸ்டாப்பில் திருடியைக் கண்டதும், பாக்கெட்டில் பணத்துடன் தவிக்கும்போது நன்றாய் நடித்திருக்கிறார்.

ஆமாம், அசோகன் முதலியவர்கள் பணக்கார நாகேஷ் வீட்டில் வந்து ஒரே கலாட்டா பண்ணுகிறார்களே, அது அசட்டுத் தனமா? அனுவசியமா? எதைச் சேர்ந்தது? நாகேஷ் நன்றாக நடிக்கிறார். வி. கே. ராமசாமியும் அவரும் நல்ல நகைச்சுவை விருந்தளிக்கின்றனர். ஏ. சகுந்தலா பணக்காரர் வீட்டு ஒரே பெண்ணாக வந்து கொஞ்சிக் கொஞ்சிப் பேசி ஜெய்சங்கரின் அழகை ரசிப்பது தமாஷ்தான்! சசிகுமாருக்கு நல்ல சான்ஸ்! 'அக்கா அக்கா' என்று திருடியிடம் குழைந்து பேசுவதே நன்றாக இருக்கிறது.

மனோகருக்கு ஒரு மாறுதலான வேஷம். ரவுடிக் கூட்டத்தில் ஒருவனாக வரும் அவர் கடைசியில் போலீஸ் அதிகாரியாகத் தோன்றுவது அவர் வரையில் புதுமைதானே!

திரைக் கதை, வசனம், டைரக்ஷன் மதுரை திருமாறனுடையவை. வசனம் சுவையாயிருக்கிறது. படத்தின் ஒளிப் பதிவு மிகவும் சுமார்.

எம். எஸ். காசியின் தயாரிப்பான 'திருடி'யில் என்ன கருத்தைச் சொல்லியிருக்கிறார்கள்? உங்களுக்குத் தெரிந்தால் தயவு செய்து சொல்லுங்கள்!

—காந்தன்




முனிசாமியின் விசாரணை முடிந்து கங்கா கோபால் கிளம்பும் போது....
மிஸ்டர் கங்காகோபால்! தருமராஜைக் கொன்றது மல்லிகா தான் என்பது உங்கள் முடிவானால் அது தவறு...


சதீஷின் குரலில் காணப்பட்ட உறுதியும் அவன் அதைக் கூறிய முறையும் கங்கா கோபாலிடம் வியப்பை ஏற்படுத்தியது. அதைக் கண்டும் காணாதவனாக இருந்தான் சதீஷ்..


சதீஷ் உன்னுடைய உணர்ச்சிகள் எனக்குப் புரிகிறது. முரளி உன் உயிர்த் தோழன். அவனைச் சேகர் கொன்று விட்டான். அந்தக் கோபம் உனக்குச் சேகரிடம், இல்லையா?


அதற்கான தண்டனையைச் சேகர் அனுபவித்து விட்டான். இனி எல்லாக் குற்றங்களையும் அவன் மீது சுமத்திக் கொண்டிருப்பதில் அர்த்தமில்லை.


... அர்த்தமிருக்கிறது கங்கா கோபால்! ஒரு நிரபராதியான அபலைப் பெண்ணின் உயிர் இதனால் காப்பாற்றப் படும் என்று நினைக்கிறேன்.


மௌனமாக ஒரு நிமிஷம் சதீஷைத் தன் பார்வையால் துளைத்த கங்கா கோபால் பிறகு நிதானமாக...
... கவர்னருக்குத் தந்தி கொடுத்து மல்லிகாவின் தண்டனையை நிறைவேற்று வதை நிறுத்தச் சொல்ல நேர மிருக்கிறது...


அதற்கான வேளை இன்னும் வரவில்லை. சோமுவின் அறையில் எனக்குக் கிடைத்த ஒன்றைப் பற்றி உங்களிடம் நான் சொல்லவில்லை. மிஸ்டர் அனந்தாச்சாரி, அந்த உயிலை வாசியுங்கள்...


லாயர் அனந்தாச்சாரி தருமராஜனின் பதிவு செய்யப்படாத உயிலைப் படித்து முடிக்கும் வரை அங்கு அமைதி நிலவியது.
இப்போது புரிகிறதா? இந்தப் புதிய உயிலைத் தயாரித்த போது பழைய உயிலை அழிக்காமல் அசட்டையாக இருந்து விட்டார் தருமராஜன். அது மட்டுமல்ல...


தமது புதிய உயிலை அவர் முறைப்படி பதிவு செய்யவில்லை. அதற்குள், கயவர்கள் காலனை கட்டாயப் படுத்தி விட்டார்கள். நீங்கள் நினைப்பது போலவே, சோமு தன் வளமான எதிர் காலத்தை உருவாக்கிக் கொள்ள இரண்டாவது உயிலை மறைத்து விட்டு...


...முதல் உயிலின் படி தருமராஜனின் திரண்ட ஆஸ்திக்கு அதிபதியாகத் திட்டமிட்டிருக்கிறான். இதை அறிந்த வதை இருந்த முரளியைத் தீர்த்துக் கட்டி இருக்கிறான். ஆனால் இங்குதான்...


..ஓர் உண்மை பளிச்சிடுகிறது. மல்லிகாவிற்காக நீதிமன்றத்தில் வாதாடிய சோமுவும் மல்லிகாவிற்கு மரண தண்டனை வாங்கித் தரும் படியாகச் சாட்சியமளித்த மேனகாவும் சேர்ந்துதான் தருமராஜனின் முடிவுக்குத் திட்டமிட்டிருக்க வேண்டும்...


தன் கணவனை மேனகாவே கொன்று விட்டுக் குற்றத்தை மல்லிகா மீது சுமத்தி உயிலையும் மறைத்திருக்கிறாள் சோமுவுடன் சேர்ந்து கொண்டு என்கிறாயா நீ?
நடக்கக் கூடியது தானே... ஏன் நடந்ததும் கூட, இல்லையா நந்தகோபால்?
தொடரும்

ஓர் அயனுன பிற்பகல். மணி ஒன்று இருபது.

மின் விசிறியைத் திருப்பி விட்டு விட்டு, ஜமுக்காளத்தை விரித்து, தலையைச் சற்றே சாய்த்தேன். — கூப்பிட்டுவிட்டது டெலிபோன்!

எடுத்தேன். "ஹாய், ஜானு 'கண்ணு!'" என்று இழைந்தது குரல். அவர்தான்! வேறு யார் கண்ணே, மூக்கே என்பார்கள்? ஆபீசிலிருந்து.

"எஸ், டார்லிங்!"

"நத்திங் சீரியஸ் — ஒரு 'பாஸ்' வந்திருக்கிறது — மாட்னிக்கு. எப்போதோ கேட்டதை நினைவில் வைத்துக் கொண்டு இப்போது கொண்டு வந்து தந்து 'மிஸ் பண்ணுமல் போ' என்கிறுன். ஆபீஸ் பையனிடம் அனுப்புகிறேன். உனக்குப் பிடித்தமான படமாம். பக்கத்திலேதானே தியேட்டர் வீனஸ்? போய்விட்டு வந்துவிடு!"

பத்து நிமிஷங்களில் பாஸையும் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போய்விட்டான் பையன். 'சரி, நாம் மட்டுமாவது போய் வந்து வருவோம்' என்று கிளம்பினேன்.

வாசலுக்கு வந்தபோது எதிர்சாரியிலுள்ள 'உமன் ஹாஸ்டல்'லின் கேட் அருகில் எந்தவிதமான சிந்தனையுமின்றி "அவள்" நிற்பது தெரிந்தது.

அவளுடன் எனக்கு அதிகப் பழக்கம் இல்லை. ஒரு மாதமாகத்தான் அவளை இங்கு பார்க்கிறேன். ஒரு ஹாண்ட் பாக்கை மார்பில் அணைத்துக் கொண்டு தினமும் காலையில் கிளம்பிப் போவாள். சாயங்காலம் எப்போது திரும்புவாள் என்று தெரியாது.

இன்று அவளைப் பார்த்ததும், 'சினிமாவுக்குக் கூப்பிட்டால் என்ன?' என்று தோன்றிற்று. "மிஸ்... உங்கள் பெயர் தெரியவில்லை... இரண்டு பாஸ் இருக்கிறது... நீங்களும் வருகிறீர்களா?" என்று கேட்டேன்.

அவள் ஒரு கணம் திகைத்து விட்டாள். பிறகு, "ஓ, வருகிறேனே" என்று கிளம்பி விட்டாள். ஒரு டாக்ஸி பிடித்துக் கொண்டு தியேட்டருக்கு விரைந்தோம்.

தியேட்டரில் கூட்டமே இல்லை. படமும் படு போர். "கண்ணராவி! எழுந்து போய் விடலாமா என்றிருக்கிறது!" என்றுள் காமினி.

"போனுல் போச்சு!" என்று எழுந்தேன். இருவரும் வெளியே வந்து பார்த்தால் ஒரே பேய் மழை! தியேட்டர் வளைவில் படு சுமாரான சோபாக்கள் கிடந்தன. இரண்டு கப் காப்பி தருவித்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டோம்.



# ஒரு பொய்,

பொய் சொன்னாலும்
பொருந்தச் சொல்லாததால்
அது அப்படி
கப்பும் கிளையும் விட்டுப்
படர்கிறது!

அவளுக்குப் படத்தில் வந்த ஏதோ ஒரு காட்சியின் நினைவுபோலிருக்கிறது. காப்பியை உறிஞ்சிக்கொண்டே, "அந்த ஹீரோயின்தான் எத்தனை அழகாக இருக்கிறுள்! ஆனால் அவ்வளவு அழகை வைத்துக் கொண்டு கொஞ்சம் கூடப் பயமில்லாமல் அத்தனை பேர் மத்தியில் எப்படித்தான் வளைய வந்து ஆடிப் பாடுகிறுளோ — நிஜவாழ்க்கையில் முடியுமா?" என்றுள்.

"வெறும் அர்த்தமில்லாத பயம்!" என்று சிரித்தேன்.

"அர்த்தம் இருக்கிறதோ இல்லையோ — எனக்கென்னமோ ஆண்களைக் கண்டாலே பயம்தான். பயத்தோடு தான் முதன் முதல் வேலை செய்த ஆபீஸில் கால் எடுத்து வைத்தேன். பயந்த மாதிரியே நாலைந்து தடியன்கள் சதா என்னைச் சீண்டித் துன்புறுத்தி என்னை வேலையை விட்டே போகும்படி செய்துவிட்டார்கள்... இப்போது நான் இருப்பது இரண்டாவது ஆபீஸ். இந்த ஆபீஸில் முன் ஜாக்கிரதையாக ஒரு பொய் சொன்

# எது நிஜம்?

ஆர். அருந்ததி



னேனே, பிழைத்தேனே! ஆனால் தற்காப்புக்காக நான் சொன்ன பொய் என் வாழ்க்கைக்கே எப்படி யமனாகி விட்டது?... என்னை வெறும் நடைப் பிணமாகவே ஆக்கி விட்டதே!''

அவள் கண்களில் கண்ணீர். சத்தமில்லாமலே இலேசாகக் கேவிக் கொண்டாள்.

''உங்களுக்கு ஒன்றும் அவசரமில்லையே... யாரிடமாவது சொன்னால்தான் மனசுக்கு ஆறுதலாக இருக்கும் போலிருக்கிறது'' என்று ஆரம்பித்துப் பேசினாள் காமினி:

நான் ரொம்ப ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள். ஒரே பெண். வெகு நாட்கள் கழித்துப் பிறந்தேனாம். என் பெற்றோர் என்மீது உயிரையே வைத்திருந்தார்கள். நான் படித்துப் பெரியவளானபோது அப்பாவுக்கு வயதாகிவிட்டது. பார்வை வேறு குறைந்தது. அவர்களைக் காப்பாற்றுவதற்காக நான் வேலைக்குப் போனேன் ...

ஆபீசா அது? கடவுளே! நாலு குழந்தைகளுக்கு அப்பாவாகிவிட்ட ஹெட்கிளார்க் எப்போது பைலைக் கொடுத்தாலும் விரலைத் தீண்டாமல் கொடுக்க மாட்டார். இள வயதினரான சக குமாஸ்தாக்கள் இருவர் எப்போது என்னைக் கண்டாலும் உடனே இலேசாகச் சீட்டியடிப்பார்கள். கண்களைச் சிமிட்டுவார்கள்.... எனக்கு அங்கே ஒரு நிமிஷம்கூட இருக்கப் பிடிக்கவில்லை. 'சீ' என்று காகிதாசியைக் கொடுத்து விட்டு வந்து விட்டேன்....

இரண்டு மாத காலம் வேலைக்கே போக மாட்டேன் என்று பிடிவாதமாக இருந்தேன். ஆனால் போகாமல் வழி? மூன்று வயிறுகள் இருக்கின்றனவே? நல்லவேளையாக வேறொரு கம்பெனியிலிருந்து அழைப்பு வந்தது. போனேன். வேலையும் கிடைத்தது. ஆனால் இங்கே ஆரம்பிக்கும்போதே ஒரு தற்காப்பு செய்து கொண்டேன். எனக்குச் சீக்கிரத்தில் கல்யாணம் ஆகப் போகிறது என்றும், என் 'வுட் பீ' லண்டனில் படித்துக் கொண்டிருப்பதாகவும், கூட வேலை செய்த பெண்கள் மூலமாக எல்லோருக்கும் தெரியப்படுத்திவிட்டேன். நான் எதிர்பார்த்தபடியே இந்த மந்திரம் அற்புதமாக வேலை செய்தது. எல்லோரும் என்னிடம் மரியாதையாக நடக்க ஆரம்பித்து விட்டார்கள். நானும் நிம்மதியாக வேலை பார்த்தேன்.

இப்படி ஒரு பொய்க் காதலனை அவர்கள் முன் நான் நிறுத்தி விளையாடிக் கொண்டிருந்தபோது, ஒரு நிஜக் காதலனை என் முன் அனுப்பி விதி விளையாட ஆரம்பித்தது.

ரகுபதி என்று ஒரு சூபர்வைசரின் நட்பு எனக்குக் கிடைத்தது. ரகுபதியின் மீது நான் உயிரையே வைத்திருந்தேன். அவர் இல்லாவிட்டால் எனக்கு உலகமே இல்லை என்ற நிலைக்கு வந்துவிட்டேன். அப்பா அம்மாவிடம் கூடச் சொல்லியாகிவிட்டது. அவர்களும் சம்மதித்து விட்டார்கள். அம்மாவுக்குப் பரம சந்தோஷம். நல்ல நாள் பார்த்துப் பத்திரிகை அடிக்க வேண்டியது தான் பாக்கி.

திடீரென்று அன்று ஆபீசுக்குள் நுழைந்த மறு நிமிஷமே 'போன் கால்' வந்தது. ரிஸீவரை எடுத்த நான் பதறிப் போய் விட்டேன். என் காதுகளையே நம்ப முடியவில்லை. ஒவ்வொரு வார்த்தையும் அனல் குண்டாக விழுந்தது.

''டியர், சொல்வதைக் கேளுங்களேன்; ஐயோ, நான் பேசக் கொஞ்சம் இடம் கொடுங்களேன் — நான் சுத்த மானவள். உங்களைத் தெய்வமாக மனசிலே ஆராதித்துக் கொண்டிருக்கிறவள் — என் தாயின் மீது ஆணை. பிளீஸ், ரகுபதி!'' கெஞ்சினேன்; கதறினேன்.

''நோ... நோ... உன் மூஞ்சியிலே விழிப்பதே மகா பாவம்.'' — 'டக்'கென்று போனை வைத்து விட்டார்.

என் தலை சுழன்றது; பூமி காலடியில் நழுவுகிற மாதிரி இருந்தது. லீவு சொல்லி விட்டு ஆட்டோவில் ரகுபதியின் அறைக்கு. ஆபீசுக்கு ஓடினேன். ஒரு மாத லீவு போட்டு விட்டு எங்கோ போய் விட்டாராம்!

என் ஆபீஸ் சக ஊழியர் கமலநாதனும் ரகுபதியும் பால்ய சிநேகிதர்களாம். வெகு காலத்துக்குப் பிறகு இன்று காலையில் சந்தித்தார்களாம்.... என்னை ஒரு டாக்ஸியில் ஏற்றிவிட்டு ரகுபதி திரும்பினபோது கமலநாதன் அங்கே வந்து சேர்ந்திருக்கிறார். குசலப் பிரச்னம் ஆனதும், ''என்டா, நான் வந்தபோது யாரையோ டாக்ஸியில் ஏற்றி அனுப்பினாயே — யாருடா?'' என்று கேட்டாராம்.

''மை வுட் பி ஒய்ப்டா!'' என்றாராம் ரகுபதி.

''என்னது? உன் வுட் பியா? என்னடா ஃபூல்? லண்டனில் அல்லவா இருக்கிறான், அவனுடைய வுட் பி! எங்கள் ஆபீசில்தானே வேலை பார்க்கிறாள். எனக்குத் தெரியாதா? நன்றாகத்தான் ஏமாந்துவிட்டாய், போ!'' என்றாராம் கமலநாதன்.

எல்லாம் கமலநாதனே சொல்லித்தான் எனக்குத் தெரிந்தது. ''என்னம்மா—விஷயம் தெரியாமல் · நான்பாட்டுக்கு என்னமோ உளறி விட்டேனம்மா'' என்று அவர் அப்புறம் என்ன பரிதவித்து என்ன — என் வாழ்க்கையே போய் விட்டது!

பேசி முடித்த காமினியைப் பார்க்க இரக்கமாக இருந்தது.

''அப்புறம் அந்த ஆபீசே எனக்குப் பிடிக்கவில்லை. ரிசைன் பண்ணிவிட்டேன்'' என்றாள்.

''மனசை என்னமோ பண்ணுகிறது, உன் கதை! மேலே என்ன செய்யப் போவதாக உத்தேசம்?''

''மேலேயா?'' விரக்தியாகச் சிரித்தவள், ''என்ன வழி? நீங்கள்தான் சொல்லுங்களேன்! நானும் இந்த ஆறு நாட்களாக மண்டையை உடைத்துக் கொள்கிறேன்!'' என்றாள்.

''இன்று காலையில் பத்திரிகையில் ஒரு விளம்பரம் வந்திருக்கிறது. டார்ஜிலிங்கில் மலையேறுவோர் கழகத்தின் விடுதிக்கு ஒரு காப்பாளர் தேவையாம். உனக்கு நிச்சயமாகக் கிடைக்கும். கண்காணாத இடமும்கூட.''

''அங்கே போனால் மட்டும் என் மனப் புண் ஆறிவிடுமா?''

''காலம் ஆற்றாத புண் என்ன இருக்கிறது, காமினி. அங்கே போனதும் என்ன நடக்கும் என்பதைச் சொல்கிறேன். கேள். நீ அந்த ஹில் ஸ்டேஷனுக்குப் போகிறாய். ரம்மியமாக இருக்கிறது, எல்லாம். சில நாட்களிலேயே புத்துயிர் வந்தது போலிருக்கிறது. விடுதிக்கு யாராவது ஒரு காவல்காரன் கிழவன் இருப்பான்.. அவனுக்கு ஏதாவது ஒரு வாத்தியம் வாசிக்கத் தெரிந்திருக்கும். அவனுடைய இசை உன் மனப் புண்ணை ஆற்றிவிடுகிறது. பூக்கவும் காய்க்கவும் தயாராகிவிட்ட புதுச் செடிபோல் நீ ஆகிவிடுகிறாய் — அப்போது?''

''அப்போது?''

''மலை ஏறுவதற்கு வருகிறது ஒரு கோஷ்டி. அதில் ஒரு கதாநாயகனும் இருக்கிறான். கோரா, கிருதா, கலைந்த காட்டு முடி, அழுக்குச் சட்டை — அத்தனை லட்சணமும் பரிபூரணமாக இருக்கிறது. உன்னைப் பார்த்ததும் அவன் கையிலிருந்த 'கப் அண்ட் ஸாஸரை' நழுவ விட்டுவிட்டு 'ஹா' என்கிறான்; நீ சாம்பார் கிண்ணத்தைக் கீழே போட்டுவிட்டு, ''ஹாய்'' என்கிறாய். அச்சு, அடையாளம் எல்லாம் உன் காதலுக்கு 'பை பை' சொல்லிவிட்டுப் போனானே, அந்தப் பயல் மாதிரியே இருக்கிறது. நீங்கள் இருவரும் காதலிக்கத் தொடங்குகிறீர்கள். காடு, மேடு, மலை, ஓரிடம் பாக்கியில்லாமல் 'டூயட்' பாடிக்கொண்டு சுற்றுகிறீர்கள். ஒரொரு நாளும் ஒரொரு விதமாக புரஸ் பண்ணிக் கொள்கிறாய்..... கடைசியில், ஆடிப் பாடி ஓய்ந்த பின், ஒரு நாள், ஒரு பெரிய பனிப் பள்ளத்தின் மேல் விளிம்பில் வந்து நின்று கொண்டு உன்னை அணைத்துக் கொண்டு, ''டார்லிங்! இப்போது நாம் சுவர்க்கத்துக்குப் போகிறோம்!'' என்று சொல்லிவிட்டு, பையிலிருந்து ஒரு சின்ன மைக்கையும் கஜக் கணக்கான சன்ன ஒயரையும் எடுக்கிறான். 'என்ன இது?' என்று கேட்கிறாய் நீ. 'இதுவா? கீழே ஒரு குகையில் மேனாட்டு டெலிவிஷன்காரர்கள் இருக்கிறார்கள்.... அவர்களோடு ஒரு ஒப்பந்தம்.... காதலனும் காதலியும் கட்டிக் கொண்டே மலையிலிருந்து விழும்போது அவர்களுடைய உணர்ச்சிகளை அப்படியே ரிகார்ட் செய்து உலகத்துக்குக் காட்ட அவர்கள் விரும்புகிறார்கள். லட்சம் டாலர் சம்மானம். அது ஏற்கனவே மூன்று பிள்ளைகளுடனும் கந்தல் புடவையுடனும், நிற்கும் என் மனைவிக்குப் போய்ச் சேர்ந்துவிட்டது. வா, கண்ணே! வர்ணனை செய்துகொண்டே நாம் விழுவோம்!' என்கிறான். அடுத்த கணம் 'வீல்' என்று அந்த மலைப் பிரதேசமே கிடுகிடுக்க நீ அலறுகிறாய். அவனோ உன்னை உடும்புப் பிடியாய்ப் பிடித்துக் கொண்டு, மைக்கில் ஏதோ புலம்பிக் கொண்டே, கீழே பனிப் பள்ளத்தில் பாய்ந்து விடுகிறான்—''

''கடவுளே! என்ன பயங்கரமான முடிவு?'' என்றாள் காமினி.

''பயங்கரமான முடிவுதான்! அப்பத்தானே படம் பிரமாதமாக இருக்கும்?''

''என்ன சொல்கிறீர்கள்?''

''ஏழு நாட்களாக ஒரு சினிமாவுக்குக் கதை ஜோடிக்க மண்டையை உடைத்துக் கொண்டிருக்கிறாய். பாதிக் கதை வந்துவிட்டது; அதை என்னிடம் சொல்லிச் 'சரி' பார்த்துக் கொண்டாய். மிச்சக் கதையை நான் முடித்துக் கொடுத்தேன். அவ்வளவுதான், காமினி!''

''நான் சினிமா கதாசிரியை என்று எப்படித் தெரிந்தது?'' அவள் சிரித்தாள்.

''எங்க வீட்டு வேலைக்காரிதானே, காலையில் உன் அறையையும் சுத்தப்படுத்திக் கூஜாவில் தண்ணீர் கொண்டு வந்து வைக்கிறாள்...அதைவிடப் பெரிய செய்தித் தகவல் நிலையம் வேறு என்ன இருக்கிறது?''

# சிங்கப்பூர் சீமான்



திரு கோவிந்தசாமி பிள்ளை

"1905ம் வருஷம். கொந்தளிக்கும் கடலில் பாய் கட்டின படகுக் கப்பலில் பல நாட்கள் பிரயாணம் செய்து பிறந்த மண்ணை விட்டுத் தூர தேசம் சென்ற ஆசாமி நான். இந்தக் காலத்தில் ஒரே நாளில் விமானத்தில் உலகத்தைச் சுற்றி வந்துடறாங்க!" இப்படி அதிசயிப்பவர் சிங்கப்பூர் வர்த்தகர் திரு கோவிந்தசாமி பிள்ளை.

மாயூரத்தில் பிறந்த திரு கோவிந்தசாமி பிள்ளை சிங்கப்பூருக்குப் படகேறிச் சென்று முதலில் சாதாரணப் பணியாளராக வாணிபத் துறையில் புகுந்து, பல வருஷ அனுபவங்களுக்குப் பிறகு சொந்தமாக வர்த்தகம் செய்யும் அளவுக்கு உழைப்பினால் உயர்ந்தவர்.

"ஐயா! கையிலே முதல் வைத்திருந்தால் மட்டும் போதாது! மூலதனம் வாணிபத்தை நடத்தி லாபத்தைச் சம்பாதித்துத் தராது! நல்ல தொழில் நுணுக்க அறிவும் அனுபவமும்தான் வர்த்தகத்துக்கு முதலோடு தேவை!" என்கிறார் பழுத்த பழமான வியாபாரி. இவருக்குச் சிங்கப்பூரில் மொத்த வியாபாரக் கடையும், சில்லறை வியாபாரக் கடையும் உள்ளன. இவரது மூன்று புதல்வர்களுமே வாணிபத் துறையில்தான் ஈடுபட்டுள்ளனர். மூத்த புதல்வர் திரு ராமச்சந்திரன் சிங்கப்பூர் வாணிப சங்கத்தின் தலைவர்.

"சிங்கப்பூர் செல்வம் கொழிக்கும் பூமி என்கிறார்களே, உண்மைதானா?"

"ஆம்! இப்போ சிங்கப்பூரிலே கடலையும் தூர்த்து அங்கே பிரும்மாண்டமான மாட மாளிகைகளை எழுப்புகிறார்கள். அங்கே லஞ்சம் என்ற பேச்சுக்கே இடமில்லை. எந்தக் காரியத்தையும் கையூட்டின்றிச் சாதித்துக் கொள்ளலாம். ஆஸ்பத்திரிகளில் லஞ்சம் தலை காட்டக்கூடாது என்று போர்டுகள் தொங்குகின்றன. போர்டு தொங்க விடுவதுடன் திருப்தி அடைந்துவிடவில்லை. லஞ்சத்தை ஒழித்தே விட்டார்கள். சிங்கப்பூரில் முதன்முதலில் காட்டை அழித்து நாடாக்கிய பெருமை தமிழர்களுக்கே உண்டு. போர்க் காலத்தில் தமிழர்கள் தாய் நாட்டுக்குத் திரும்பிய வேளையில் சீனர்கள் அதிக அளவில் வர்த்தகத் துறையை ஆக்கிரமித்துக்கொண்டார்கள்! அவர்களிடம் ஒற்றுமை அபாரம். ஒரு சிறு விஷயம் எடுத்துக் கொள்ளுங்களேன். நம் தமிழர்கள் வந்த புதிதில் சீனர்களுக்கு வேர்க்கடலை விற்றுக் கொண்டிருந்தார்கள். உடனே அவர்கள் வேர்க்கடலையை நிறைய வாங்கி மிஷினில் பக்குவம் பண்ணிப் பாக்கெட்டுகளில் போட்டுப் பெரிய வாணிபமாகவே ஆக்கி விட்டார்கள். இப்பொழுது தமிழர்கள் சீனர்களிடம் வேர்க்கடலை வாங்கிச் சாப்பிடுகிறார்கள்!" என்றார் முதிய வர்த்தகர் கோவிந்தசாமி சிரித்துக் கொண்டே.

"சிங்கப்பூர் சுத்தத்துக்குப் பேர் போனது ஆயிற்றே...!" என்று வேறு திசையில் பேச்சைத் திருப்பினேன்.

"சுத்தத்தை ஒவ்வொரு வீட்டிலும் சர்க்கார் கடைப்பிடிக்க வைக்கிறார்கள். வீட்டிலே கொசு இருந்தால் அபராதம்! அந்தக் கொசு வளருவதற்கு 'அசுத்தப் பொருள்களை விட்டு வைப்பதுதானே காரணம்? உடனே கடுமையான அபராதம் விழுந்து விடுமாதலால் ஒவ்வொருவரும் சுத்தத்தைக் கடைப்பிடிக்கிறார்கள்!" என்கிறார் நெடுநாளைய சிங்கப்பூர் வாசி திரு கோவிந்தசாமி பிள்ளை.



சிங்கப்பூரிலுள்ள அழகிய தேசிய அரங்கும், நீரூற்றும்.



சிங்கப்பூரில் தமிழ்க் கோயில்.

''கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பார்கள். சிங்கப்பூரில் கோயில்கள் நிறைய உண்டா?''

''சிங்கப்பூரில் இருபது கோயில்களுக்கு மேல் இருக்கின்றன. சிங்கப்பூர் மாரியம்மன் கோவில் விசேஷமாயிற்றே! அந்த ஊரிலேயே பிறந்து வளர்ந்த திரு பக்கிரிசாமி பிள்ளை கிருஷ்ணன் கோவிலைப் பராமரித்து வருகிறார். சேதுவில் அணை கட்ட அணில் சேவை செய்த மாதிரி நானும் பக்திப் பணியில் ஈடுபடும் வாய்ப்புக் கிடைத்துள்ளது. சிங்கப்பூர் ராமகிருஷ்ண மடத்துக்கு ஒரு கட்டடம் கட்டிக் கொடுத்திருக்கிறேன். பெருமாள் கோயிலுக்கு அருகில் கல்யாண மண்டபம் கட்டி வைத்திருக்கிறேன். சிங்கப்பூரில் நகரத்தாரின் சேவை மகத்தானது. அவர்கள் தண்டபாணி கோவிலேயே நிர்மாணித்திருக்கிறார்கள்!'' என்று சொல்கிறார் திரு கோவிந்தசாமி பிள்ளை.

அவரது தமிழக விஜயத்துக்குக் காரணம் ஏராளமான புடவைகளைச் சிங்கப்பூருக்குக் கொண்டுபோய் வாணிபம் செய்வதுதான்! இங்கே வந்ததும் அவர் கண்ட குறை, விவசாயம், வாணிபத் தொழில் துறைகளை விட்டு விட்டு நம் தமிழர்கள் உத்தியோகம் உத்தியோகம் என்று ஆலாய்ப் பறப்பது தான்!

''அந்தக் காலத்தில் ஜார்ஜ் டவுனில் கோவிந்தப்ப நாயக்கன் தெருவில் கோமுட்டி செட்டிகள் அமர்ந்து வாணிபம் செய்வார்கள். இப்பொழுது வட நாட்டிலிருந்து வந்திருப்பவர்கள் வாணிபம் செய்கிறார்கள். உத்தியோக ஆசை நம் வாணிபத் திறமையைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்கி வருவதைக் காண்கிறேன்!''

சென்னைக்கு வந்திருந்த இந்தச் சிங்கப்பூர் சீமான் மயிலை கபாலீசுவரர் கோயிலுக்கு லட்ச ரூபாய் வரை நன்கொடை வழங்கிக் கற்பகாம்பாள் சமேத கபாலீசுவரனின் திருவருளுக்குப் பாத்திரராகவிருக்கிறார் என்பதும் குறிப்பிடத் தக்கது. —பி.எஸ்.எம்.

---

# அப்பாவி

**கதாநாயகன் ஆரம்பத்தில்**
**அப்பாவியா யிருந்தால்**
**இடைவேளைக்குப்**
**பிறகு 'டிப்டாப்'பாக மாறிவிடுவான்.**
**ஆனல் இந்த நாடகத்தில்...?**

சிவகுமார், அப்பாவி. நடிப்பில் அல்ல ரசிகர்களுக்கு மன நிறைவைத் தரும் வகையில் மிகவும் சிறப்பாக நடித்தார். அண்ணியின் தாயன்பில் திளைத்தபோதும், அண்ணனின் மிரட்டல் உருட்டல்களுக்கு அஞ்சி நடுங்கி அப்பாவியாக நின்றபோதும் சிவகுமார் பல சபாஷ்களைப் பெற்று விட்டார்.

அப்பாவியின் அண்ணன் சாம்பசிவம். அவனுக்கு நேர் மாறான குணமுடையவன்; தைரியசாலி. மேஜர் சுந்தரராஜன் இப்பாத்திரத்தில் மிக நன்ருக நடித்தார். அண்ணன், தம்பிகளின் இரு வேறு இயல்புகளும் நடிப்புக்கு நல்ல வாய்ப்புக்களைத் தேடித் தந்திருக்கின்றன. தம்பியின் அப்பாவித்தனத்தைக் கண்டு சீற்றம் அடைந்தபோதும், சீற்றம் தீர்ந்து நெகிழ்ந்தபோதும் மேஜரின் நடிப்பில் ஏற்பட்ட மாற்றம் பாராட்டுக்குரியது.

''அப்பாவி''யின் அண்ணி பவானியாக நடித்தவர் பானுமதி. ரசிகர்களைக் கவரும் தோற்றமும், பாத்திரத்துக்கு ஏற்ற சிறப்பான நடிப்பும் இவரது சிறப்பியல்புகள். மைத்துனனிடம் அவனது அப்பாவித்தனமான காதல் விவகாரங்களை நிதானமாகவும் அன்பாகவும் கேட்டறியும் கட்டம் ஒன்று போதும் பானுமதியைப் பாராட்ட!

நாஞ்சில் நளினி, தாயார். மிகவும் இயல்பான நடிப்பு. அப்பாவியின் படு கட்டித் தங்கையாக வந்து, மேடைக்குக் கலகலப்பூட்டியவர் புஷ்பா ராணி. வி. ராஜகோபால், சாம்பசிவத்தின் மகன். இவரால் காமெடியும் கிடைக்கிறது, நாடகத்துக்கு நல்ல திருப்பமும் கிடைக்கிறது.

பிரபல நாடக ஆசிரியர் கோமல் சாமிநாதன் ''அப்பாவி''யில் யார் அப்பாவி, யார் அயோக்கியன் என்று நிச்சயிக்க முடியாத 'சஸ்பென்ஸ்'களையும் எதிர்பாராத திருப்பங்களையும் வைத்துக் கடைசி வரையில் நாடகத்தை விறுவிறுப்பாகச் செய்திருக்கிறார்.

''அப்பாவி''யைப் பார்க்கச் செல்பவர்கள் அப்பாவிகள் அல்ல. —காந்தன்



"பழமையான கரகரப்பான
பற்பொடிகள் உங்கள்
ஈறுகளுக்கும், பற்களுக்கும்
தீங்கு இழைக்கக்கூடும்..."



# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!




பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக் கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும்போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய் நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி நவீன பராமரிப்பு முறையில், உங்கள் பற்களையும் ஈறுகளையும் பாதுகாக்கிறது; மற்றும் வாய் நாற்றத்தையும் உடனே நிறுத்துகிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

**உங்கள் குடும்பத்திற்கு எகானமி சைஸ் கால்கேட் பற்பொடியை இன்றே வாங்குங்கள்! ஒரு டப்பா மாதக் கணக்கில் வரும்!**



...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் ப்ரஷ் உபயோகியுங்கள்.

TP.G.21 TM

# கொந்தளிக்கும் உள்ளம்

• குயிலி ராஜேஸ்வரி •

மனத்தில் அளவுக்கு மீறிய குமுறல்கள் மோதும்போது வீட்டில் ஒரு பயங்கர நிசப்தம் நிலவி விடுகிறது. அந்த வீட்டிலும் அப்படித்தான் ஒரு பயங்கர அமைதி பரவியிருந்தது. விசாலம் தனக்குள் கோபத்தில் முணு முணுத்துக்கொண்டவளாகச் சமையல் அறையில் வேலை செய்துகொண்டிருந்தாள்.

சமையல் அறையை அடுத்த கூடத்தில் அமர்ந்து கொண்டிருந்த சங்கர் கோபத்தில் கையில் கிடைத்த காகிதத்தை ஆத்திரம் தீரக் கிழித்து வீசிப் போட்டுக் கொண்டிருந்தான்.

''கடன்காரன். கொஞ்சம்கூட நிலைமை தெரியாதவனா யிருக்கிறான். அவர்கள் எல்லாம் நம் வீடு ஏறி வரக் கூடியவர்களா? அவ்வளவு ஆசையாக வந்து கூப்பிட்டபோது இந்த முட்டாள் முகத்தில் அடித்தாற்போல் மாட்டேன் என்று சொல்லி விட்டதே! தங்கமா காரிலே ஏறிப்போய் ராஜாவாட்டம் சாப்பிட்டுவிட்டு வந்திருக்கலாமே! அந்த மாதிரி அறுசுவை விருந்தை நினைக்கத்தான் முடியுமா? இல்லை, நம்மைத்தான் யார் இப்படி மதித்து அழைக்கிறார்கள்? கஷ்டம்! கஷ்டம்! செய்த பாவம் யாரை விடுகிறது'' எனப் பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தாள் விசாலம்.

அவள் சொல்வது காதில் விழ விழ முகத்தைக் கோணி அழகு காட்டிக்கொண்டிருந்தான் சங்கர். அவன் பல்லைக் கடித்ததே அவனுடைய ஆத்திரத்தின் ஆழத்தை நன்கு தெரிவித்தது.

விசாலத்துக்குத் தெரிந்த பெரிய பணக்கார வீட்டுப் பெண்களிலே ரதி ஒருத்தி. அவளுடைய காருண்யம் என்ற போர்வையில் கொடுக்கும் உதவிகள் விசாலத்தின் குடும்ப வண்டி ஓடப் பெரிதும் உதவின. அன்று ரதியின் பிள்ளைக்குப் பிறந்த நாள். அதனையொட்டி ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தாள் அவள். அவள் வீட்டுக்குக் கூப்பிட்டகுரலுக்கு விசாலம் போய் உதவுவது வழக்கம். அந்தப் பழக்கத்தில் விசாலத்தின் மகன் சங்கரையும் அன்று தன் வீட்டு விருந்தில் கலந்து கொள்ள வேண்டும் என விரும்பினாள்.

சங்கரை அழைத்துப் போகத் தானே காரைப் போட்டுக் கொண்டு வந்திருந்தாள். இருவரும் கெஞ்சியும் அதட்டியும் கூடச் சங்கர் கண்டிப்பாக மறுத்து விட்டான். விசாலம் அருகில் வந்து 'போடாப்பா. சமர்த்தோன்னோ!' என்று சொன்னபோது கோபத்தில் விசாலத்தைப் பிடித்துத் தள்ளி விட்டான் சங்கர். அவன் தள்ளிய வேகத்தில் எதிரில் இருந்த சுவரில் போய்ச் சாய்ந்தாள் விசாலம்.

'கடன்காரன்! கால் சரியாக இல்லாவிட்டாலும் உடலில் பலத்துக்கு ஒன்றும் குறைச்சல் இல்லை' எனக் கொந்தளித்த விசாலம் தொடர்ந்து அவனுக்கு அர்ச்சனை செய்து கொண்டிருந்தாள்.

ஒரு நாள், கிழமை என்றால் ஒரு பாயசம் செய்து கொடுக்கக்கூட வசதியில்லாத நிலை அவளுடையது. யார் வீட்டிலாவது கல்யாணம் என்று அழைத்தால்கூட அவள் சங்கரை அழைத்துச் செல்வதில்லை. பாவம், குழந்தை! அவன் கால்கள் சரியில்லை. பார்ப்பவர்கள் ஏதாவது கேலி செய்வார்கள். குழந்தையின் மனம் பாடுபடுமே என நினைத்து, தான் மட்டும் சென்று வருவாள். இதற்காகவே கல்யாண வீடுகளில் அவள் சாப்பிடுவதுகூடக் கிடையாது. குழந்தை சாப்பிடவில்லையே என்ற நினைவு அவள் தொண்டையைக் குத்திப் பிடுங்கும். அவனுக்கு இல்லாதது நமக்கும் வேண்டாம் என வந்து விடுவாள்.

இந்தச் சூழ்நிலைகளால்தான் அவன் ரதி வீட்டுக்குப் போகாதது அவளுக்குப் பெரிய நஷ்டமாகத் தோன்றியது. 'நல்ல பழங்களும், பண்டங்களுமாக ஒரு நாளாவது சாப்பிடலாமே? இதற்குக் கொடுத்து வைக்கவில்லையே?' என மாய்ந்து போனாள் விசாலம். — தாயுள்ளமாயிற்றே!

''சங்கர்! வாடா சாப்பிட'' என்று அழைத்தாள் தாய்.

''வேண்டாம், போ! எனக்கு ஒண்ணும் சாப்பாடு வேண்டாம்'' எனக் கோபமாகப் பதிலுரைத்தான் தனயன்.

''ஏண்டா இப்படி என்னை ஆட்டிப் படைக்கிறே! பட்டினியாகவா இருக்கப் போறே? வாடா, வந்து சாப்பிடு!'' என்றாள்.

''வேண்டாம்னா வேண்டாம்தான்'' என்று வீறாப்போடு கூறியவன் கையிலிருந்த கயிற்றால் தரையில் ஓங்கி ஓங்கி அடித்தான்.

பயங்கர மௌனம் மீண்டும் வீட்டில் பரவியது.

வாசல் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. தலையை நிமிர்த்திப் பார்த்தான் சங்கர். அவன் சகோதரி மாலா நுழைந்தாள்.

மாலாவுக்கு என்றுமே தன் சகோதரன் மேல் அதிகப் பற்று. அருகில் உள்ள வீடுகளுக்குக் குழாய் ஜலம் பிடித்துக் கொடுப்பது அவளுக்கு ஒரு வேலை. அதில் கிட்டும் பணம் அந்தக் குடும்பத்துக்குத் தேவையாகத்தான் இருந்தது.

''சங்கர், சங்கர் குட்டி! என்ன பண்ணறான் என் அருமைத் தம்பி!'' எனக் கேட்டவாறே அவன் அருகில் வந்தாள் மாலா. அவனுக்காக அவள் பத்திரமாகக் கொண்டு வந்திருந்த மிட்டாய் கை ஈரத்தால் கசிந்திருந்தது.

அவளைப் பார்த்ததும் அப்படியே இறுகக் கட்டிக் கொண்டு அழுது விட்டான் சங்கர்.

''சங்கர்! ஏண்டா கண்ணு அழறே? உடம்பை ஏதாவது பண்ணுகிறதா? வீட்டுக்கு யாராவது வந்தார்களா? உன்னைப் பார்த்து ஏதாவது புண்படப் பேசினார்களா?'' எனப் பதறினாள் மாலா.

இதற்குள் விசாலம் வந்து நடந்தவற்றை மகளிடம் கூறி அவன் ரதி வீட்டுக்குப் போகாததைக் கூறி அங்கலாய்த்தாள்.

''ஏண்டா, சங்கர்! அம்மாவை அப்படித் தள்ளலாமா? ஆசையாக அவ்வளவு பெரிய மனுஷி வந்து கூப்பிடுகையில் மறுக்கலாமா? நாளை உதவி தேவைப்படும்போது எந்த முகத்தை வைத்துக் கொண்டு அவர்களைப் பார்ப்பது?'' என்றாள் மாலா அன்போடு அணைத்தவாறு.

சங்கர் அவள் மடிமீது முகத்தைப் பதித்தான். அவனைத் தடவிக் கொடுத்தவாறு, ''ஏண்டா ராஜா! இவ்வளவு நல்ல சாப்பாடு நமக்கெல்லாம் நினைத்தால்தான் கிடைக்குமா?'' என்றாள்.

சங்கர் தலையை நிமிர்த்தி அவளை நோக்கினான். கண்களிலிருந்து நீர் அவன் கன்னுடிக் கன்னத்தில் வழிந்து ஓடியது. ''இந்த நல்ல சாப்பாடு எனக்கு வேண்டவே வேண்டாம் அக்கா. ரதி மாமி அன்போடு எனக்குச் சாப்பாடு போட வேண்டும் என்று கூப்பிடவில்லை. என்னைப்போல் நொண்டிகளுக்கெல்லாம்..''

பாய்ந்து அவன் வாயைப் பொத்தினாள் மாலா. ''என் கண்ணு அப்படியெல்லாம் சொல்லாதே'' எனக் கெஞ்சினாள்.

''இல்லேஅக்கா. இந்த அம்மாவுக்குத்தெரியல்லே. அந்த மாமி எங்களையெல்லாம் கூப்பிட்டுச் சாப்பாடு போட்டுச் சமூக சேவை செய்யறேன் எனச் சொல்லிக்குவா. எங்களோட நின்னு படம் எடுத்துக்குவா. என்னோட சூம்பின காலு நன்னு போட்டோவிலே தெரியும்படிதான் உட்கார வைப்பா அக்கா. எனக்கு எத்தனை கோபம் வரது தெரியுமா? அப்படி நான் எதுக்காக அக்கா அவா வீட்டிலே போய்ச் சாப்பிடணும்?'' என்றான்.

அவன் தேம்பித் தேம்பி அழ அவனை இறுக அணைத்துக் கொண்டு மாலாவும் அழுதாள்.

தன் பிள்ளையை எப்படி ரதி நடத்துகிறாள் என அறிந்ததும் ரத்தம் கொதித்தது விசாலத்துக்கு. 'இவனுடைய கேலிக் கூத்துக்கா நான் பெற்று வைத்திருக்கிறேன்?' என நினைத்தவள் புடவைத் தலைப்பால் தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''மாலா! அவனை அழைத்துக் கொண்டு சாப்பிட வா'' எனக் குரல் கொடுத்தாள் விசாலம்.

அடுத்த விநாடியே அலுமினியத் தட்டின் முன் அமர்ந்து வெறும் மோரும் சாதத்தை அரட்டை அடித்துக் கொண்டு சாப்பிட ஆரம்பித்தனர். அது பணக்கார விருந்தை விட அமிர்தமாக இருந்தது அவர்களுக்கு.

சங்கர் தன்னைப் பரிதாபமாகப் பார்ப்பதையோ, தன்மேல் அனுதாபப்படுவதையோ அறவே வெறுக்கிறான்; இதனாலேயே பிறரைப் பார்க்கவும் கூசுகிறான் என்பதை மாலா புரிந்து கொண்டாள். அவனிடம் தன்னம்பிக்கையை வளர்க்க வேண்டும், அதுதான் அவனை நிமிர்ந்து வாழச் செய்யும் என்றும் புரிந்து கொண்டாள்.

தன் பள்ளிக்கூடக் கைவேலை ஆசிரியரை ஒரு நாள் வீட்டுக்கு அழைத்து வந்தாள் மாலா. அவர் சங்கரோடு பல விஷயங்களைப் பேசினார். தன்னை மதித்து அவர் பேசியது அவனுக்கு மட்டற்ற மகிழ்ச்சியைத் தந்தது. தொடர்ந்து அவர் வந்தார்; அவ்வப்போது கைவேலை செய்யும் வித்தையும் அவனுக்குக்



உடல் ஊனம்
வெளியே தெரியும்;
உள்ளத்தின் ஊனம்?



# மனோரஞ்சன்

திரைப் படங்களைப் பிடித்துள்ள
ஜனரஞ்சக ஜுரம்
104 டிகிரிக்கு ஏறிவிட்டது
இப்படத்தில்!

பெயருக்கேற்ப மனோரஞ்சன் பொழுதுபோக்குச் சித்திரம்! பொழுதுபோகாதவர்களுக்குத்தானே பொழுதுபோக்கு தேவை? இருக்கிற நேரம் போதாமல் தவிப்பவர்கள் இப்படம் ஓடும் தியேட்டர் பக்கம் ஏன் தலைகாட்டப் போகிறார்கள்?

எஸ். வி. மேஹ்ரா 'டர்ட்டி ஹாரி'யை 'கூன் கூன்' ஆக்கிக் கொலை செய்து புகழ் பெற்றவர். இப்பொழுது பிலி வைல்டரின் 'இர்மா லா டூஸ்' படத்தை இந்தியச் சூழ்நிலைக்கு ஏற்ப(?) மனோரஞ்சனாக மாற்றிப் பொழுதைப் போக்கியிருக்கிறார். அவர் பொழுது படம் எடுப்பதில் போயிற்று; ரசிகர்களின் பொழுது படத்தைப் பார்ப்பதில் வீணாயிற்று.

என்றுமும் இரவு ராணிகள் இரவு வேளைகளில் இப்படித் தெருவில் நின்று வாடிக்கை பிடிக்கும் துணிவைப் பெற்று விட்டார்களா? விபசார விடுதிகளுக்குப் போலீஸ் மேலிடம் முதற்கொண்டு காக்கும் அளிக்கும் நேரத்தில் சாதாரணம் போலீஸ்காரர் ரத்தன் விபச்சாரத்தைத் தடுக்கப் போனால் வேலையிலிருந்து நீக்கம் பெறுவது நியாயந்தானே? அப்பாத்திரம் ஏற்றிருக்கும் 'பாத்' சஞ்சீவ் குமார் 'கோஷிஷ்' நடிப்பிலிருந்து மீண்டு வந்ததாகத் தெரியவில்லை.

அப்புறம் கதை விபசார விடுதிக்கே வந்துவிடுகிறது. ஆம், ரத்தன், 'நீமா' (ஜீனத் அமான்) என்னும் பெண்ணின் மனத்தை மாற்றி அவளைத் திருமணம் புரிந்து கொள்ளும் வரை கதையை வளர்த்த பெருமை நமது திரைப் படங்களுக்கே உரிய ஜனரஞ்சக ஜுரத்தைச் சாரும். ஜீனத் அமான் உடைகளைத் துறப்பது போலவே நடிப்பையும் துறந்துவிட்டார். நவரஸ் போன்ற வேஷங்கள் புனைந்து எப்படி எப்படி யெல்லாமோ நடித்தோம் என்று பெயர் பண்ணிக் கொண்ட சஞ்சீவ் குமார் 'பாத்' பட்டத்துக்கு இழுக்கைத் தேடித் தருகிறார்.

'தாப்சான்கி' கபேயை நிர்வகிக்கும் ஷம்மி கபூர் படத்தையும் இயக்கி, ஏற்ற பாத்திரத்துக்கு நியாயம் வழங்க முயன்றிருக்கிறார்.

ஏன், பாடல்கள்கூட அதிகமாக மனத்தில் நில்லாமல் பொழுதைப் போக்கிவிடுகின்றன. இந்தப் பொழுதுபோக்குப் படத்தைப் பார்த்து மகிழும்படி செய்யும் ஒரே அம்சம் நுணுக்கமான காமிராக் கலை. தம் பொழுதை லாபகரமான பொழுதாகப் போக்கி ரசிகர்களை மனோரஞ்சனக் காட்சிகளாகக் காண வைத்த பெருமை அல்லது சிறுமை துவாரகா திவேசாவின் இயக்குநரைத் திறமையைச் சாரும். மனோரஞ்சன் பெயரைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறது; நற்பெயரை அல்ல! - ரா. வீ.

---

கற்பித்தாள். சங்கர் மிக உற்சாகத்தோடு கைவேலை செய்யத் தொடங்கினான்.

நாட்கள் ஓட ஓட அவனுடைய செயல்களில் நேர்த்தி இருந்தது. கற்பனைத் திறனும் அதிகரித்தது. அவன் செய்த பொருள்களுக்குத் தனி கிராக்கியும் இருந்தது. அவன் செய்வது எல்லாம் விலை போயிற்று. சங்கருக்கு வாழ்க்கையில் ஒரு பிடிப்பும் உற்சாகமும் ஏற்பட்டன. எல்லோரையும் தலையை நிமிர்த்திக் கம்பீரமாகப் பார்த்தான் சங்கர்.

பிள்ளையின் ஊனம் அவன் வாழ்க்கையை ஊனமாக்கிவிடாது என நிம்மதியோடு மூச்சு விட்டாள் விசாலம்.

பொருளை மதித்து வாங்க வந்தால் வியாபாரம் செய்தாள் மாலா. சங்கர் நிலைக்குப் பச்சாதாபப்பட்டு யாராவது வாங்க வந்தால் வியாபாரத்தைத் தொடர்வதில்லை மாலா.

ஆம், உடல் உறுப்பு ஊனம்தானே வெளியில் தெரிகிறது! மனத்தின் ஊனம், குணத்தின் ஊனம் எங்கு தெரிகிறது?

ஊனம் உடையவர்கள் விரும்புவது சமமான உரிமைகளையும், அவர்கள் உழைப்பின் மதிப்பையும்தான்! மற்றவர்களின் அனுதாபம் அவர்களுக்கு ஆறுதல் அளிப்பது இல்லை, வேல் கொண்டு பாய்ச்சுவது போல்தான் இருக்கிறது என்பதை இந்த உலகில் எத்தனை பேர் புரிந்து கொண்டிருக்கிறார்கள்? சங்கரைப் போல் கொந்தளிக்கும் உள்ளம் நினைவுக்கு வருமா இனி ஊனம் உள்ளவர்களைப் பார்க்கையில்?

(ஸ்தாபிதம் : 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

"வீணு விகார்" — 17-A, :.பிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6759 : : தந்தி: "GROWRICH"

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட
**மார்ச் 1974 புதிய குருப்புகள்**

| குறுகிய காலம் 25 மாதங்கள்-25 அங்கத்தினர்கள் முதல் ஏலத் தேதி : 10-3-74 | | | நீண்ட காலம் 40 மாதங்கள்-40 அங்கத்தினர்கள் முதல் ஏலத் தேதி : 31-3-74 | | |
|---|---|---|---|---|---|
| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சிட்டுத் தொகை ரூ. | வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சிட்டுத் தொகை ரூ. |
| B | 100/- | 2,500/- | LTE | 500/- | 20,000/- |
| C | 50/- | 1,250/- | LTF | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | LTG | 125/- | 5,000/- |
| | | | முதல் ஏலத் தேதி 17-3-74 | | |
| | | | LTM | 50/- | 2,000/- |

நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை
வார விடுமுறை: திங்கட்கிழமை

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
**"பாலுஸேரி பில்டிங்ஸ்"**
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை – 5
தபால் பெட்டி 414

கிளைகள் : பெங்களூர் — கல்கத்தா — புது டெல்லி — கோயம்புத்தூர்

இலவசப் பிரசுரத்திற்கு எழுதுங்கள்

சிட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின்
உரிமையைப் பொறுத்தது




எங்கள் சேவை உங்களுக்குத்தேவை






# சில்வர் ப்ரின்ஸ்

சுத்தமான, மழமழப்பான க்ஷவரத்தைத் தரும்...
உறுதிமொழியை நிறைவேற்றிடும் பிளேடு.




## சில்வர் ப்ரின்ஸ்–சுகமான க்ஷவரம்...சோகுசான க்ஷவரம்

நீங்கள் சில்வர் ப்ரின்ஸ் கொண்டு மழமழப்பாகவும், சுத்தமாகவும் க்ஷவரம் செய்து கொள்ளலாம். ஏனெனில் இறக்குமதியான மிகச் சிறந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீலில், இந்தியாவில் அதி முன்னேற்ற-




மான தொழில் நுட்பத்துடன் தயாரிக்கப் படுகிறது சில்வர் ப்ரின்ஸ். நீங்களும் சுகமான க்ஷவரத்தைப் பெறுகிறீர்கள். எனவேதான் சில்வர் ப்ரின்ஸ் முகக்ஷவரத்தை சுகக்ஷவரம் என்கிறோம்.

Grant.5.TM

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# இப்பொழுது! யுகோபாங்க் உங்கள் டிபாஸிட்டுகளை கிட்டத்தட்ட **மும்மடங்கு** ஆக்குகின்றது




## நீங்கள் யுகோபாங்க் டிபாஸிட் ஸர்டிபிகேட் திட்டத்தில் பணம் போட்டு வைத்தால்!

இத்திட்டப்படி ரூ. 5000 டிபாஸிட் செய்கிறீர்கள் என்றால், அத்தொகை சரியாக 15 ஆண்டுகளில் கிட்டத்தட்ட மூன்று மடங்கான ரூ. 15,000 ஆகப் பெருகிவிடுகிறது நீங்கள் முதலில் போட்ட பணத்திற்கு இது எவ்வளவு கணிசமான தொகை! இத்திட்டம், குறைந்த தொகை ரூ 100 லிருந்து தொடங்கி அதற்கு மேல் எவ்வளவு தொகை வேண்டுமானாலும் போகலாம்.

தாங்களே தங்களுக்கு உதவ
மக்களுக்கு லாபகரமாக உதவுகிறது




# யுனைடெட் கமர்ஷியல் பாங்க்

UCOC-20 TAM

